

கைவண்ணமும் கலைவண்ணமும்
ஒருங்கிணைந்து உருவாக்கும்
கைத்தறிக் கண்காட்சி'82
கோ-ஆப்டெக்ஸ் மைதானம்,
எழும்பூர், சென்னை-8.
9-4-82 முதல்
சிறப்புத் தள்ளுபடி
20%
கோ-ஆப்டெக்ஸ்
ELEGANT



ஆர். ஆர். தளவாய்



சதாசிவ....பாண்டியன்



டாக்டர் கோதண்டபாணி

# வித்தியாசமானவர்கள்



பட அதிபர் ஆதிராஜன்



பேசா கணேசன்



வக்கீல் நடராஜன்

## சதாசிவ...பாண்டியன்

'சதாசிவ வரகுண பராக்கிரம ஜெயங்கொண்ட பாண்டியன்' என்ற நீளமான பெயரால் இவர் பெற்ற அல்லல்கள் பல. வேலைக்கான மனு அனுப்பும்போது இவர் பெயரை இரண்டு வரிகளில் எழுதவேண்டியிருந்ததாம். ஆங்கிலத்தில் இவர் பெயர் எழுதப்பட்டால் படிக்கத் திணறுதவர்களே கிடையாது. இவர் பணிபுரியும் பெரம்பூர் இரயில் பெட்டித் தொழிற்சாலையில் கம்ப்யூட்டர் மூலம் தயாரிக்கப்படும் சம்பளப் பட்டியலில் இவ்வளவு நீளமான பெயரை இணைக்க முடியாது என்று கூறிவிட்டார்களாம். எனவே சம்பளத்துக்காகத் தம் பெயரை எம். எஸ். பாண்டியன் என்று சுருக்கிக்கொண்டுள்ளார்.

## ஆர். ஆர். தளவாய்

காந்தியவாதியான ஆர். ஆர். தளவாய்க்குப் பொழுதுபோக்கு மக்கள் நலன் காக்கப் பொதுப் பிரச்னைகள் குறித்து அவ்வப்போது நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்வது. இந்தி எதிர்ப்புத் தியாகிகளுக்கு அரசு பணத்தில் 'பென்ஷன்' கொடுப்பது, சென்னை மாநகராட்சிக்குச் செலுத்த வேண்டிய வீட்டு வரி, தண்ணீர் வரி வசூலிப்பு முறை முதலியவை குறித்து சொந்தச் செலவில் வழக்கு தொடுக்கும் இவர், வாதாட வக்கீல்களை அமர்த்துவது இல்லை. நீதி மன்றத்தில் தாமே வாதாடுவாராம்.

## டாக்டர் கோதண்டபாணி

தோல் வியாதி நிபுணரான டாக்டர் கோதண்டபாணி, மருத்துவத் துறையிலிருந்து விலகி, ஆன்மீகம், அரசியல், சமூகம் மற்றும் பொருளாதாரத்தால் விளைந்த மாற்றங்கள் குறித்த ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார். இவ்வாராய்ச்சி பற்றிய எண்ணற்ற நூல்களை வாங்கி, வீடு முழுவதையும் புத்தகங்களால நிறைததிருக்கும் இவர் தம்முடைய ஒரே மகனுக்குச் சொத்தாக விட்டுச் செல்வது இப்புத்தகங்களையே எனப் பெருமையுடன் கூறுகிறார். டெலிபோன் என்றாலே இவருக்கு அலர்ஜி. டெலிபோன் ஒலிக்கும்போது, அதை எடுக்கும் முன்னர், ''என்ன செய்தியோ...'' ''யார் அழைக்கிறார்களோ'' என அடிக்கடி நாம் எண்ணுவதால் ஒரு 'டென்ஷன்' உருவாக — இரத்த அழுத்தம் ஏற்படக் காரணமாகிறது'' என்கிறார்.

## பட அதிபர் ஆதிராஜன்

மேற்கு மாம்பலம் ஆண்டியப்ப நாயக்கர் தெருவில் உள்ள ஒரு குடிசையில் (நடைபாதையில் அமைந்தது) வாழும் ஆதிராஜன் ஒரு படத் தயாரிப்பாளர். தம்முடைய குலதெய்வமான பூமாதேவிக்கு மிகப் பெரிய அளவில் கோவில் கட்ட வேண்டிய இலட்சியத்தை நிறைவேற்ற படத் துறையை நாடியுள்ளார் இவர். இதுவரை ஐயாயிரம் அடிகளுக்கு மேல் வளர்ந்திருக்கும் இவர் படத்தின் பெயர் 'சித்தர்'. சமூகக் கதையாம்.

கதை, வசனம் டைரக்‌ஷன் மூன்றும் இவரே. அவ்வப்போது நண்பர்கள் தரும் நன்கொடைகளும், ஓய்வு நேரங்களில் தாம் பார்க்கும் கைரேகைத் தொழிலும் சிறுக சிறுகத் தரும் தொகைகளை மொத்தமாகச் சேர்த்து வைத்து அவ்வப்போது ஷூட்டிங் நடத்துகிறார் இவர்.

**பேசா கணேசன்**

மத்திய அரசு தொழிற்சாலை ஒன்றில் பணி புரியும் கணேசன் பிறருடன் பேசிப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாகிவிட்டது. தாம் பூஜிக்கும் தெய்வம் கனவில் தோன்றிக் கட்டளை இட்டதற்கிணங்க, இவர் பேசுவதை நிறுத்திக் கொண்டாராம். அலுவலகத்தில் அதிகாரிகளிடம் எழுத்து மூலமாகவே பேசுகிறார். ஒரு தடவை பம்பாய் சென்றிருந்தபோது தாம் தங்கியிருந்த ஹோட்டல் முகவரி அடங்கிய காகிதத்தை வெளியே சென்றிருக்கும்போது தவற விட்டு விட்டார். சுமார் ஆறு மணி நேரம் அலைந்து திரிந்து கண்டுபிடிக்க வேண்டியிருந்த சமயத்தில் கூட யாரிடமும் பேசியது இல்லை என எழுதிக் காட்டுகிறார்.

**வக்கீல் நடராஜன்**

'பார்வர்டு' பிளாக் கட்சியில் பெரும்பங்கு வகிக்கும் வக்கீல் நடராஜன் விவாகரத்து சம்பந்தப்பட்ட வழக்குகளில் பணம் பெறுவதில்லை. ஆண்டவன் அனுக்கிரகத்தால் நடைபெற்ற திருமணத்தைச் சட்டத்தின் துணை கொண்டு உடைத்தாலும் – தவறு தன் கட்சிக்காரர் மீதா எதிர்க் கட்சிக்காரர் மீதா என்று உணர முடியாதென்பதால் வழக்கு வெற்றி பெற்றாலும் அதற்கெனப் பணம் பெறுவது இல்லையாம் இவர்.

பேட்டி, படம்: எம். ஏ. எஸ்.

---



○ வேத விழாவில்

● டி.ஜி. சுப்பிரமணிய கனபாடிகள், வேதம் பயின்றவர். வேத விற்பன்னர்களிடம் பேரன்பு கொண்டவர். ஒவ்வொரு ஆண்டும் திருவெண்காடு க்ஷேத்திரத்தில் வேத பாராயணம் தலைசிறந்த வேத வித்துவான்களைக் கொண்டு, தன்னுடைய பெரு முயற்சியாலும் வேதாபிமானிகளின் திரவிய சகாயத்தைக் கொண்டும் நடத்தி வருகிறார். 44ம் ஆண்டாகிய இவ்வாண்டு காசியில், ஹனுமான் காட் - ஸ்ரீ காசி காமகோடீஸ்வரர் மந்திரில் நடத்தினார். இந்த வைபவத்தில் இந்தியாவின் பல திசைகளிலிருந்து பூரணமான வேதம் பயின்ற பல வேத வித்துவான்கள், ஆஸ்திக மெய்யன்பர்கள் ஆயிரக் கணக்கில் கலந்து கொண்டார்கள். டி. ஜி. சுப்பிரமணிய கனபாடிகளின் 44 ஆண்டு விடா முயற்சியினை எல்லோரும் பாராட்டி, பொன்னாடை சூட்டிக் கௌரவித்தார்கள்.

வேத சதஸ் நடைபெற்றபோது ராஜ கிஷோர் குப்தா, ராம்மோகன் பட்டக் ஆகியோர் தலைமை தாங்கி, தென் இந்தியாவிலிருந்து காசி க்ஷேத்திரம் வந்து வேத விழா நடத்துவதைப் பாராட்டினர். -ஜெயந்தி





○ ராஜ்குமார்

● தேனியில் வசிக்கும் டாக்டர் என்.ஆர். டி. ராஜ்குமார் ஒவ்வொரு மாதமும் கிராமம் கிராமமாகச் சென்று இலவச மருத்துவ முகாம் நடத்துகிறார். இவரைச் சந்திக்க வரும் மருந்து விற்பனைப் பிரதிநிதிகளிடம் குடிசைகளின் மத்தியில் நிற்கும் ஒரு கோவணம் கட்டிய சிறுவனின் படத்தைக் காட்டி ''இவனுடைய மேம்பாட்டுக்காக நாம் என்ன செய்கிறோம்?'' என்று கேட்டு அவர்களிடமிருந்து டானிக் மருந்துகள் பெறுகிறார். அவை தவிர ஊசி மருந்து, மாத்திரைகளும் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு கிராமமாகச் சென்று ஏழைகளுக்கு விநியோகிக்கிறார். அத்தகைய முகாம்களில் அரசு அதிகாரிகளையும் கலந்துகொள்ளச் செய்கிறார். கிராம மக்களுக்கு உள்ள அசௌகரியங்களை இயன்ற அளவு நீக்க முயலுமாறு வேண்டுகிறார். இவ்வாறு 14 இலவச மருத்துவ முகாம்கள் நடத்தி சுமார் 30000 ரூபாய் பெறுமானமுள்ள மருந்துகளை சுமார் 6000 எளியோருக்கு விநியோகம் செய்துள்ளார்.

—என். ஸ்ரீதர்



அப்பு ஒரு
மால்டோவா
ரசிகன்!

# மால்டோவா ஏசியாட் ஆரோக்கிய பானம்.




Monde (உலக) தரத் தேர்வில் தங்க
மெடல் வென்ற மால்டோவா
இப்போது ஏசியாட் 82 விளையாட்டுப்
போட்டியின் ஆரோக்கிய பானமாய்த்
தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே,
ஆசிய விளையாட்டு வீரர்
ஒவ்வொருவரும் தினம் சுவை மிக்க
மால்டோவா பருகி ஆரோக்கியம்,
பலம் மற்றும் சக்தியுடன்
போட்டியில் பங்கெடுக்கத்
தொடங்கலாம். போட்டியில் தங்க
மெடல் பெறுவதற்கு இதைவிடச்
சிறந்த வழியும் உண்டோ!



Official
Suppliers to




வைட்டமின்கள் கூடிய

## மால்டோவா

ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு

**JiL** ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்



Monde (உலக) தரத்
தேர்வில் 'பாராட்டுடன்'
கூடிய தங்க
மெடல் பெற்றது.
ஆம்ஸ்டர்டாம், 1981.

ASP/JIL/82 Tam



# டாக்டர் ரங்காச்சாரி

டாக்டர் ரங்காச்சாரியிடம் உதவியாளராகச் சேர்ந்தார் டாக்டர் சங்கரன். வேலை ரொம்பக் கடுமை. உதவிக்கு யாருமில்லை. சங்கரனுக்கு ஆர்வம் இருந்தும் அவ்வளவு வேலைச் சுமையைத் தாங்க முடியவில்லை. தாம் விலகிக்கொள்வதாக எழுதிக்கொடுத்து விட்டார். டாக்டர் ரங்காச்சாரி அதை ஏற்று சங்கரனை உடனே அனுப்பி விட்டிருக்கலாம். செய்யவில்லை. அன்புடன் ஒரு கடிதம் ஆங்கிலத்தில் எழுதினார் சங்கரனுக்கு.

...ஒரு வாரம் பத்துநாள் நீ விடுமுறையில் சென்று திரும்பலாம். பிறகு பணியைத் தொடரலாம்... ஆனால் அந்த ''இன்னொரு முடிவுக்கு'' நீ தீர்மானமாக வந்துவிட்டாயெனில் நான் தடுக்க விரும்பவில்லை... அன்றாட வேலைச் சுமைகளை உனக்குக் கூடிய வரை குறைப்பது என்று நினைத்திருந்தேன்... நீ என்ன செய்யப் போகிறாய் என்பதைத் தெரிவிக்கவும்...

என்ன செய்வார் டாக்டர் சங்கரன்? தொடர்ந்து ரங்காச்சாரியிடம் பணியாற்றி அவரது பேரன்பைப் பெற்றார். ரங்காச்சாரி காலமானபோது செல்வத்தைப் பலருக்கு எழுதி வைத்தார். சங்கரனுக்கோ தாம் பயன்படுத்திய சஸ்திர சிகிச்சை ஆயுதங்களை உயிலில் எழுதி வைத்தார்!

ரங்காச்சாரியின் பெயரைத் தாங்கி சென்னை மௌபரேஸ் ரோடில் நடக்கிறது ரங்கா நர்ஸிங் ஹோம். அதை இன்று நிர்வகிப்பவர் டாக்டர் சங்கரனின் புதல்வர் டாக்டர் எம். எஸ். வேங்கடராமன்.

ரங்காச்சாரி பயன்படுத்திய சஸ்திர சிகிச்சை ஆயுதங்கள் இன்னும் தம்மிடம் உபயோகத்தில் இருப்பதாகக் கூறுகிறார். டாக்டர் ரங்காச்சாரி நூற்றாண்டினையொட்டி அவர் தரும் மேலும் சில தகவல்கள்:

மனிதாபிமானம், நுட்பமான அறிவு இரண்டும் இணைந்து செயலாற்றிய மேதை டாக்டர் ரங்காச்சாரி. பொது மருத்துவம், ரண சிகிச்சை, பெண்கள் மருத்துவம் ஆகிய மூன்று துறைகளிலும் அற்புதமாகச் செயலாற்றியவர். அந்தந்தத் துறைகளில் அப்போது புகழோடு இருந்த பிரபல டாக்டர்களுடன் தனி நபராகத் தாம் மட்டுமே 'போட்டி' போட்டு வெற்றியும் கண்டவர்.

விலை உயர்ந்த 'பென்ஸ்' கார் வைத்திருந்தார். சொந்தமாக பிளேனும் உபயோகித்து வந்தார். ''காரிலேயே பாதிப்பொழுது கழிகிறது; ஏறத்தாழ அதுவே வீடு மாதிரிதான். எனவே சொகுசான கார் வைத்திருப்பதில் என்ன தப்பு?'' என்று கேட்பார். சில வெள்ளைக்காரர்கள் பொறாமை கொண்டு ஏதோ சொன்னவுடன் அதை விற்று அதைவிடப் பெரிய புதிய கார் வாங்கினார்! டம்பத்துக்காக அல்ல; வெள்ளைக்காரர்களுக்குத் தாம் ஒன்றும் குறைந்தவரல்ல என்பதை எடுத்துக் காட்டத்தான்.

ஏழை எளியவர்களிடம் மிகுந்த பரிவு கொண்டவர். சேரிப் பகுதிகளுக்கெல்லாம் சென்று சிகிச்சை அளித்துப் பண உதவியும் செய்திருக்கிறார். வெளியே செல்லும்போது நட்ட நடு ரோட்டிலேயே யாராவது சிகிச்சைக்கு வேண்டி நின்றால் அந்த இடத்திலேயே குணப்படுத்தியிருக்கிறார். ஆனால் அதே சமயம் பெரிய பணக்காரர்களிடம் நிறைய உறிஞ்சி விடுவார்.

டாக்டரைப் பற்றிப் பல கர்ண பரம்பரைக் கதைகள் நிலவி வருகின்றன. நிறை கர்ப்பமாக இருந்த பெண் ஒருத்திக்கு வயிற்றில் ஏதோ குத்தி சிசுவின் விரல் வெளியே தெரிந்தது. அதை உடனே கவனித்த டாக்டர் சிகரெட் சூட்டைக் காண்பித்தார். சூடு தாங்காது குழந்தையின் விரல் அனிச்சையாக உள்ளே இழுத்துக்கொள்ள, சற்றும் தாமதியாமல் தாயின் வயிற்றைத் தைத்துக் குணப்படுத்தினார். இது எவ்வளவு தூரம் நிஜமோ, தெரியாது. ஆனால் இது போன்ற ''கதைகள்'' ரங்காச்சாரி குறித்து நிலவுவதே அவர் பெருமைக்கு எடுத்துக்காட்டு.

இப்போது ரண சிகிச்சை எளிதாக மாறி வருகிறது. காரணம், நவீன விஞ்ஞானமும் புதுப் புதுக் கருவிகளும் துணை புரிகின்றன. ஆனால் இன்றைய நோக்கில் முரட்டுத்தனமான வழிமுறைகளைத்தான் அன்று பின்பற்ற வேண்டியிருந்தது. முகமூடி போல் ஒன்றைப் போட்டு நோயாளியின் முகத்தில் 'ஈதர்' தெளிப்பார்கள். சிகிச்சை செய்யத் தாமதமானால் விரும்பத் தகாத பின் விளைவுகள் ஏற்படலாம். எனவே ரண சிகிச்சையை விரைந்து முடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. அந்தச் சூழ்நிலைக்கு ஈடுகட்டி விரைவாக, லாகவமாகச் செயலாற்றியவர் டாக்டர் ரங்காச்சாரி.

பேட்டி : தமயந்தி

# ஒரு காந்தியக் கனவு நனவாகிறது!

'இந்தியாவின் ஆன்மா கிராமங்களில் உள்ளது' என்றார் அண்ணல். கிராமமக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதே நாட்டின் மெய்யான பொருளாதார வளர்ச்சி. அவர்கள் வாழ்க்கை வளம்பெற வில்லையானால் பெரிய நகரங்களை நோக்கி அவர்கள் இடம் பெயர் வதையும் அதையொட்டி எழும் பிரச்னைகளையும் தவிர்க்கமுடியாது.

அண்மைக்காலமாகத்தான் அரசியல் வாதிகளும் பொருளா தார நிபுணர்களும் இது குறித்துச் சிந்திக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அதிலும் நமது முதல்வர் எம். ஜி. ஆர். முந்திக் கொண்டுவிட்டார். இந்தியாவிலேயே வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத முறையில் ஒரு புரட்சிகரமான, முன்னோடியான, தன்னிறைவுத் திட்டத்தைத் தமிழகத்தில் அமல்படுத்தி யுள்ளார்.

இத்திட்டத்தின் முக்கியமான அம்சங்கள்: பாதுகாக்கப்பட்ட குடிநீர், இணைப்புச் சாலைகள், சிறு பாலங்கள், ஆதி திராவிடர் குடி யிருப்பிலிருந்து மயானம் செல்லும் சாலை வசதி, சிறுபாசன வசதி மேம்பாடு, ஊரக மருந்தகங்கள், தாய்சேய் நல விடுதிகள், பள்ளிக் கட்டிடங்கள், ஆதி திராவிடருக்கான வீடுகள். இந்த அடிப்படை வசதிகளோடு, குடிசைகளுக்கு மின் இணைப்பு, பெண்களுக்கான கழிப் பிடங்கள் என துணைத்திட்டங்களும் நிறைவேறி வருகின்றன.

தமிழகத்தில் மொத்தமுள்ள 378 ஊராட்சி ஒன்றியங்கள் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, மூன்று கட்டங்களில் இப்பணி நிறைவேற வேண்டுமெனத் திட்டமிடப்பட்டு, இதில் 219 வட்டாரங் களில் இரண்டுகட்டப்பணி 108 கோடி ரூபாய் செலவில் ஏற்கெனவே நிறைவேறிவிட்டது. மீதமுள்ள 159 வட்டாரங்களில் 97 கோடி ரூபாய் செலவில் மூன்றாவது கட்டப் பணி இனி தொடங்கும்.

அரசாங்கக் காரியம் என்றால் ஓரளவு லஞ்ச ஊழலையும் வீண் விரயத்தையும் தவிர்க்க முடியாது. என்றாலும் ஒரு சிறிய நோக்கத்து டன் ஆரம்பமாகி நடந்து வரும் இப்பணி முதல் இரண்டு கட்டங் களில் பெருமளவு வெற்றி பெற்றிருப்பதை மறுப்பதற்கில்லை. இதற்கு முக்கிய காரணம் முதல்வர் தாமே இதில் தீவிர ஈடுபாடு காட்டியதும் தாமதத்தைச் சகிக்க மாட்டேன் என்று எச்சரித்து வந்திருப்பதும் தான். தாமதத்தைத் தவிர்த்தாலே லஞ்ச ஊழலையும் பெருமளவு தவிர்த்து விட முடியும் என்பது மெய்தான். ஆயினும் அளவுக்கு மீறிய அவசரம் காட்டும்போது சிலபணிகள் அள்ளித் தெளித்த அவ சரக் கோலமாக முடிந்துவிடுவதும் உண்டு. அடுத்த கட்டப்பணிக்கு ஓராண்டு அவகாசம் என்பதைச் சற்றுத் தளர்த்தி, காரியங்கள் இன் னும் செவ்வனே நடக்க வேண்டும் என்பதிலும் அக்கறை காட்டலாம்.

இப்பணிகளை நிறைவேற்றினால் மட்டும் போதாது. தொடர்ந்து பராமரிக்கவும் வேண்டும். அதற்கு நிதி ஒதுக்கீடு தேவை. மக்களின் ஒத்துழைப்பும் அவசியம். தாங்கள் பெறும் வசதிகள் தாங்கள் தரும் வரிப்பணத்திலிருந்தேதான் கிடைக்கின்றன என்பதை உணர்ந்து சாலைகள், மருந்தகங்கள், வீடுகள், பள்ளிகள், கழிப்பிடங் கள் முதலியவற்றைச் சுத்தமாக வைத்திருக்கவும் மின் கட்டணங் கள் போன்றவற்றை ஒழுங்காகக் கட்டவும் பழகவேண்டும்.

இன்னொரு திட்டத்தையும் சற்றுக் கவனிப்போம்: ஜனதா ஆட்சியில், 'வேலைக்கு உணவுத்திட்டம்' என்பது இந்திரா காங்கிரஸ் ஆட்சியில் 'தேசிய ஊரக வேலைவாய்ப்புத் திட்டம்' என்று பெயர் மாற்றத்துக்கு உள்ளாகியது. இதற்காகும் செலவை மத்திய, மாநில அரசுகள் சரிபாதியாகப் பகிர்ந்து கொள்கின்றன. இத்திட்டத்தினையும் நிறைவேற்றி, மத்திய அரசுக்குக் கணக்குத் தந்து, அடுத்த கட் டத்துக்கு ஒதுக்கீடு பெறுகிற ஒரே மாநிலம் தமிழகம் தான் என் பதை நோக்குகையில் பெருமையாகவும் இருக்கிறது; நமது முதல் வருக்குக் கிராமப்புற மக்களின் மேம்பாட்டில் உள்ள ஈடுபாட்டினை உணரவும் முடிகிறது.





தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

கல்கி 1982 ஏப்ரல் 25
துந்துபி சித்திரை 12
மலர்: 40 இதழ்: 39

# விஞ்ஞானப் பக்கங்கள்

# 5-கபில்தேவ் - 5-கவாஸ்கர்!



✖ பழுப்பு குளோன் சுண்டெலிகள்

கபில்தேவ் மாதிரி இரண்டு ஆல் ரவுண்டர் இருந்தால் எந்த டீமையும் ஒரு கலக்குக் கலக்கலாம். ஆனால் இன்னொரு கபிலை எங்கேயென்று தேடுவது? ம்ஹூம். தேட வேண்டாம். நாமே இன்னொரு கபிலை உருவாக்கிக் கொள்ளலாம். கார்பன் காபி போல. உயிரியல் விஞ்ஞானிகள் குளோனிங் (Cloning) முறையில் தாவரத்தில் ஆரம்பித்து, தவளையைத் தாண்டி சுண்டெலிவரை பிரதி எடுத்துள்ளார்கள். மனிதனையும் உருவாக்கும் காலம் வெகு தொலைவில் இல்லை.

குளோனிங் என்றால் செக்ஸ் உறவு இல்லாமல் கருத்தரிக்காமல் உயிர்களை உருவாக்கும் முறை. அப்படி உருவான உயிர்கள் யாரிடமிருந்து உட்கரு எடுத்தோமோ அந்த மனிதனைப் போலவே அச்சுப் பிரதிகளாக இருப்பார்கள்.

நம்முடலில் உடல் செல்கள், செக்ஸ் செல்கள் என்று இரு வகை செல்கள் உண்டு. உடல் செல்களில் 46 குரோமோஸோம்கள் எனப்படும் அணுத் திரள்களும் செக்ஸ் செல்களில் 32 குரோமோசோம்களும் மட்டும் காணப்படும். இந்தக் குரோமோஸோம்களின் எண்ணிக்கை ஒவ்வொரு உயிருக்கும் ஒரு குறிப்பிட்ட அளவு மட்டும் இருக்கும். மனித செல்களுக்கான குரோமோஸோம்களின் எண்ணிக்கை 46. ஆண் விந்துவிலும் பெண் முட்டைக் கருவிலும் காணப்படும் செக்ஸ் செல்களில் 23 குரோமோஸோம்களே இருக்கும். கருத்தரிக்கையில் இரண்டும் இணைந்து மொத்தம் 46 குரோமோஸோம்கள் ஆவதால் உயிர் அதிலிருந்து உருவாகிறது. அதாவது இந்த 46 குரோமோஸோம்களைக் கொண்ட புதிய செல் தனக்குள் பகுக்கப்பட்டு அவை மீண்டும் தங்களுக்குள் பகுக்கப்பட்டு எண்ணிக்கையில் அதிகரித்துக் கொண்டே போய் மனித உருவெடுக்கிறது.

எனவே 46 குரோமோஸோம்களை இயல்பாகக் கொண்ட மனித உடல் செல்லை எடுத்து அதனைத் தனக்குள் பகுக்கும்படி செய்துவிட்டால் அதிலிருந்து அந்த செல்லுக்குரிய மனிதனையே உருவாக்கிவிடலாம்.

ஒரு பெண்ணின் முட்டை செல்லை எடுத்து அதன் உட் கருவை நீக்கிவிட வேண்டும். பிறகு ஆணின் உடல் செல்லின் உட்கருவைத் தனியே எடுத்து அதனை உட்கரு நீக்கப்பட்ட முட்டை செல்லுக்குள் செலுத்த வேண்டும். முட்டை செல் தனக்குள் 46 குரோமோஸோம்களைக் கொண்ட உட் கருவைப் பார்த்ததும் கருவுற்றதாக நினைத்துத் தனக்குள் பகுக்க ஆரம்பிக்கும். இப்படி உருவாகும் மனிதன், உடல் செல் யாருடையதோ அவர்களின் கார்பன் காபியாக இருப்பான். உட்கரு நீக்கப்பட்ட பெண்ணின் முட்டை செல் புதிய உட்கரு வளரமட்டும் உதவும். பெண்ணின் குணங்கள் உருவாகும் மனிதனிடம் பிரதிபலிக்காது. உடல் செல்லை அதே பெண்ணிடமிருந்தும் பெறலாம். எனில் உருவாவது அதே பெண்ணாக இருப்பாள். எனவே புதிய குளோன் மனிதனுக்குப் பெற்றோர் ஒருவர்தான். ஆண்களுக்கு அப்பாவும் பெண்களுக்கு அம்மாவும்தான் பெற்றோர்.



ஸ்விட்ஜர்லாந்தில், ஜெனிவா யுனிவர்சிடியில் குளோனிங் முறைப்படி புதிய சுண்டெலிகள் மூன்றை உருவாக்கியிருக்கிறார்கள். ஒரு பழுப்புச் சுண்டெலியின் கருவறையிலிருந்து முட்டைக் கரு எடுத்து, அதன் செல் பகுதியை மயிரிழையை விட மெல்லிய மைக்ரோபிப்பட் மூலம் உறிஞ்சி, செல்கள் பிரிக்கப்பட்டு ஒரு செல்லின் உட்கரு மட்டும் தனியே எடுக்கப்படுகிறது. பிறகு ஒரு கருப்புச் சுண்டெலியின் கருத்தரித்த முட்டைக்குள் அந்தப் புதிய உட்கரு செலுத்தப்படுகிறது. கருப்பு சுண்டெலியின் முட்டையும் விந்துவும் சேர்ந்த உட்கருக்கள் வெளியே எடுக்கப்பட்டு விடுகின்றன. இதனால் கருப்புச் சுண்டெலியின் குணாதிசயங்கள் புதிய குளோன் எலிகளுக்கு இருக்காது.

இவ்வாறு புதிதாக உருவான முட்டை 4 நாட்கள் செயற்கை முறையில் அடைகாக்கப்பட்டுப் பிறகு ஒரு வெள்ளைச் சுண்டெலியின் கர்ப்பப் பையில் வைக்கப்படுகிறது. இப்போது வெள்ளைச் சுண்டெலியின் புதிய எலிக் குஞ்சுகள் பழுப்பு நிறத்தில் வெளி வரும். இந்தப் புதிய பழுப்பு எலிகள் முதலில் உட்கரு தந்த பழுப்பு எலியின் குளோன் பதிப்புகள், கருப்பு வெள்ளை எலிகள் குளோன் வளர மட்டுமே உதவின. எந்த இடத்தில் வளர்ந்தாலும் உட்கரு தந்த பழுப்பு எலியே உருவானது.

மனிதர்களைக் குளோனிங் மூலம் உருவாக்குவதில் பல சிக்கல்கள் உள்ளன. மனிதனின் உடல் செல்கள் மிகவும் சிறியவை. அவற்றைப் பிரித்து உட்கருவை எடுப்பது எளிதான செயல் அல்ல. ஆனால் உலகம் முழுவதும் ஜெனடிக்ஸ் துறை முன்னேறும் வேகத்தைப் பார்க்கையில் மனித குளோனிங் சில வருடங்களில் கூட நிகழலாம்.

குளோனிங் வெற்றியடைந்தால் வேண்டிய விளையாட்டு வீரர்களை நாம் உருவாக்கிக் கொள்ளலாம். டீமில் 5 கவாஸ்கரும் 5 கபில்தேவும் இருந்தால் எந்தக் கிரிக்கெட் அணியையும் இணை வைக்கலாம். ஆனால் எதிராளி டீமில் 10 போதம்கள் இருந்தால்?

புதிய விஞ்ஞானிகளை உருவாக்கலாம்; ஹிட்லர்களும் இடி அமீன்களும் உருவாகக் கூடாதே என்ற பயமும் உறுத்தாமல் இல்லை.

1. உட்கரு தரும் பழுப்பு சுண்டெலி
2. முட்டைக் கருவிலிருந்து செல்கள் நீக்கப்படுதல்
3. பிரிக்கப்பட்ட செல்கள்
4. செல்லிலிருந்து எடுக்கப்பட்ட உட்கரு
5. கருத்தரித்த முட்டை கொண்ட கருப்பு எலி
6. பழுப்பு எலியின் உட்கரு கருப்பு எலியின் முட்டைக்குள் செலுத்தப்படுதல்
7. கருப்பு எலி முட்டையில் உட்கருக்கள் மட்டும் நீக்கப்படுதல்
8. 4 நாட்கள் செயற்கை அடைகாத்தல்
9. கரு வெள்ளை எலியின் கருப்பையில் வைக்கப்படுதல்
10. புது பழுப்பு குளோன் சுண்டெலி (நன்றி-டைம்)




நிலவேனி சாய்ஸ்ரீ

# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...



வாழ்நாள் கனவுகள் பலிக்க...

வாச மல்லிகை வீசிட,
வாழைகட்டி உங்கள்
வாசலில் கொட்டுமேளம் வாசிக்க...

ஆசைச் செல்விக்கு இல்லற வாசல்
திறக்க...

வருகுதே நாளும் கோளும், வருகுதே
வரன் --
கல்விமானும், கைநிறைவாய் நல்வருவாய்
காண்பவனும், நற்குடி மகனும்,
பெற்ற தாய்தந்தைக்கு
இணையாய்ப் பெண் மீது
பேரன்பு பொழிபவனும்...

எப்படி எங்கு தேடுவீர் அப்படி ஒருவரை ?
ஏடு விரித்து அழைக்கின்றோம்
தேடிக்கொள்வீர் -- தேர்ந்த வரன் ;
குலமும் கோத்திரமும்
உயர் குடும்ப நிலையும்,
படிப்பும் பணமும் பண்பும் ஏற்றமுறப்
பொருந்துமாறு --

எடுத்த எடுப்பில் கிட்டும் --
பல்லாயிரம் குடும்பங்கள் ஆதரித்த
பாதையிலே, உங்கள் செல்விக்கு --
மனம்போல் மாங்கல்யம் ...

உளம்போல் தேர்ந்தெடுப்பீர்,
விளம்பர மேடை இதோ

**THE TIMES OF INDIA**

**THE MATRIMONIAL COLUMNS**
**BOMBAY • DELHI • AHMEDABAD**

டைம்ஸ் ஆஃப் இந்தியா திருமணப்பத்திகள்
'காலங்கள்' எல்லாம் சுபம் சுபம் சுபம் !

SIMOES/BC/MAT/ 5/81

# வட்டமேஜை

## கோபுரம் உயர்ந்தது மனம் தாழ்ந்தது!

● கிருஷ்ணமணியின் தொடருக்கு அட்டைப் பட விளம்பரமே ரொம்பக் 'கவர்ச்சியாக'க் காட்சியளித்தது.
வியாசர் காலனி — திருமதி நாராயண ராவ்

● 'இந்தியக் குயில்' என்று பாராட்டப் பெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமியின் இசை ஞானத்தைப் பாராட்டிப் பிரிட்டன் நாட்டுப் பிரதமரும், இளவரசர் சார்லஸ் அவர்களும் கூறியுள்ள சொற்களைப் படிக்கும் போது உடம்பெல்லாம் புல்லரிக்கிறது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்கிறது. கட்டுரைக்கு நன்றி.
ஆரணி — இரா. சிவசுப்பிரமணியன்

● ஸ்ரீமத் ஜீயர் பேட்டியில் அவர் தம்மை சர்ச்சைக்கு ஆளாக்கிக் கொண்டதோடல்லாமல் பெரும்பாலோர் மனம் புண்படும்படியாகவும் பேசியுள்ளார். தற்போதுள்ள ஹிந்து முஸ்லிம், மற்றும் கிறிஸ்தவ மதச் சண்டைகள் போதாதென்று புது சர்ச்சைகளை ஏற்படுத்துகிறார்.
அரங்கன் கோபுரம் உயர்கிறது. ஜீயர் மனம் தாழ்கிறது.
திருக்காட்டுப்பள்ளி — எம். ஸ்ரீனிவாசன்

● எல்லார் நெஞ்சங்களிலும் குடிகொண்டிருக்கும் நடமாடும் தெய்வங்களில் ஒருவரான ஜீயர் அவர்களின் வண்ணப் படத்தைக் கண்ணாடி போட்டுப் பூஜை அறையில் வைப்பதற்கு உதவியாக இருந்த 'கல்கி'யை என் வாழ்நாள் முழுவதும் வாழ்த்திக் கொண்டே இருப்பேன்.
கும்பகோணம் — திருமதி பிரசன்ன ராஜன்

● அகோபில மடம் ஜீயரிடம் தாங்கள் கேட்ட கேள்விகள் அனைத்தும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. ஒருசில சைவ, வைணவர்களிடையே நிலவி வரும் மனக் கசப்பான துவேஷங்கள் நீங்கிவிடும்படியாக ஜீயரின் பதில்கள் அமைந்திருந்தன.
ஈரோடு — மேஜர் தாசன்

● என்ன அநியாயமய்யா 'இது'? கார்த்திகா ராஜ்குமார் கதைதான் 'இது'. 'இதை' 'அது' என்று கழுத்தை அறுத்ததென்றால் ஞானியாரும் ஸ்மிதா கணக்கில் 'அதை' என்று அறுத்து விட்டாரே! என்ன 'இது' இருந்தால் இப்படி யெல்லாம் செய்வீர்? சரியான 'இதாக' இருக்கிறீரே!
கல்கத்தா — வி. முரளி

● "சாவல் நாலு: குஞ்சு அஞ்சு" எனக்கு வாழ்க்கையே புரிஞ்சு போச்சு. நன்றி மிஸ்டர் கிரன்!
கோயம்புத்தூர் — டி.கே. சங்கரராம்

● "நீலப் புடவையில் வெள்ளை பார்டர்" மிகவும் அருமையான படைப்பு. கதையின் முடிவில் என்னையும் அறியாமல் அழுதுவிட்டேன். ஒவ்வொரு சராசரி ஆண்மகனின் உள்ளத்திலும் எழக்கூடிய உணர்ச்சிகளைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டி எழுதியுள்ள படைப்பாளருக்கு என் பாராட்டுகள்.
பரசலூர் — புவனா நாகராஜன்

● கர்நாடக மாநில இளைஞர் காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்கும் பொதுச் செயலாளருக்கும் ஏற்பட்ட வாய்ச் சண்டை காரணமாக நடக்க வேண்டிய கமிட்டிக் கூட்டம் ரத்தானது. இந்திரா காங்கிரஸில் கோஷ்டி சண்டை என்றும் உள்ளதுதான். ஆனால் பொதுச் செயலாளரின் ஆதரவாளர்கள் இளைஞர் காங்கிரஸ் தலைவர் கே.எச். ஜார்ஜை மலையாளி என்றும் அந்நியன் என்றும் குறிப்பிட்டுத் திட்டியிருக்கிறார்கள். (ஹிந்து 6—4—82) இளைஞர் காங்கிரசார் ஜாதி வெறி இன வெறி, மாநில வெறியைத்தூண்டும்படியான வசைத் தாக்குதல்களைத் தொடுப்பது அநாகரிகமானது. கல்லூரிகளில் தேசிய ஒருமைப்பாட்டு சமிதி அமைக்கிறது இந்திரா காங்கிரஸ் ஆட்சி. தமக்குள் பிராந்திய வெறியைத்தூண்டுகிறதுஇ.-காங்கிரஸ் கட்சி!
திண்டுக்கல் — வி.எச்.கே. ஹரிஹரன்

அகோபில மடம் ஜீயர் அவர்களின் கருத்துக்களைச் சாடியும் எள்ளி நகையாடியும் ஏராளமான கடிதங்கள் குவிந்தன. ஃபோனிலும் பலர் பேசினர். இவர்களில் சிலர், 'இந்தப் பேட்டியைப் பிரசுரித்துத்தான் இருக்க வேண்டுமா? ஜீயர் படத்தை வெளியிட்டுத்தான் இருக்க வேண்டுமா?' என்று கேட்டுள்ளனர். இந்தக் கருத்துக்கள் ஜீயரின் கருத்துக்களை விடவும் ஜீரணிக்க முடியாதவையாக இருக்கின்றன. ஒரு பத்திரிகையில் பேட்டி காணப்படுகிறவரின் கருத்துக்களைப் பத்திரிகையோ வாசகர்களோ அப்படியே ஏற்க வேண்டும் என்ற அவசியமில்லை. "இப்படியும் ஒருவர் இருக்கிறார்" என்று சுட்டிக் காட்டவே பல சமயங்களில் பேட்டி உதவுகிறது. அதே போல் அவர் படத்தைப் பிரசுரித்ததால் அவர் கொள்கைகளை நாம் ஒப்புக்கொண்டதாகவும் ஆகிவிடாது. நாம் எல்லாம் சுயமாகச் சிந்திக்கத் தெரிந்தவர்கள் தானே? பிரஷ்னேவ் படத்தை அமெரிக்கப் பத்திரிகையான நியூஸ் வீக் அட்டைப் படத்தில் போட்டால் கம்யூனிஸத்தை அது ஒப்புக்கொண்டதாகவா ஆகும்? ஹிட்லரின் படத்தை இதே கல்கி பத்திரிகையின் அட்டைப் படத்தில் முன்பு பிரசுரித்தார் ஆசிரியர் 'கல்கி'. பாஸிஸத்தைக் 'கல்கி' ஏற்றார் என்றா அர்த்தம்? செய்தியில் இருப்பவர் படத்தைப் பிரசுரிப்பது பத்திரிகை நடைமுறை.

—ஆசிரியர்

# ரவிகுல திலகன்

செம்பியன்

## 16

ஒரு சமயம் அக்கினிக்கும் வாயுவுக்கும் இடையில் பகைமை மூண்டு விட்டது. தங்கள் போர்த் திறனைக் காட்ட யுத்த களமாக அவர்கள் பழையாறைப் பெருநகரைத் தானா தேர்ந்தெடுக்க வேண்டும்? காற்று பலமாக வீசி, தீப்பற்றிக் கொண்டிருந்த ஒரு வீட்டின் கூரையை அப்படியே தூக்கி அப்பால் விட்டெறிந்தது. ஒரு கணம் அணைந்து விடும்போலிருந்த தீயானது அடுத்த நொடியில் முன்னிலும் பெரிதாகக் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. காற்றின் உக்கிரம் அதிகரித்தது. தீ மேன்மேலும் பரவியது. வாயு தன் வேகத்தை அதிகரித்துத் தீயை அணைத்துவிடப் பார்க்க, தீயோ புதிய பலம் பெற்றுப் பெரு நெருப்பாக எங்கும் தாவிப் படர்ந்து அனைத்தையும் சுட்டெரித்துச் சாம்பலாக்கியது.

தீப்பற்றியது, பம்பைப் படை வீடு பகுதியில். நாடு காக்கும் வீரர்கள் வசிக்கும் வட்டாரம். நட்ட நடு நிசி. பகல் போது போல் தீப் பிழம்புகள்ஒளி சிந்தின. தூக்கத்திலிருந்தவீரர்கள் பலரும் அவர்கள் குடும்பத்தினரும் புகையிலேயே திணறிச் செத்தார்கள். அல்லது நாற்புறமும் சூழ்ந்த தீயில் வெந்து மடிந்தார்கள். பெண்டு பிள்ளைகளுடன் தப்பி வந்த பலர் நாலாபுறமும் சிதறி ஓடினார்கள்; 'ஓ' வென்று கதறினார்கள்.

மன்னன் மகன் விஜயாலயன் விரைந்து வந்து பொறுப்பேற்றுக் கட்டளை பிறப்பித்த பின்னர் தான் அனைவரும் தான்தோன்றித்தனமாக நடந்து கொண்டிருந்தது மாறி ஓர் ஒழுங்கு நிலவ ஆரம்பித்தது. தீயணைப்பிலும் மீட்புப் பணியிலும் வீரர்கள் விஜயாலயனின் மேற்பார்வையில் ஈடுபட்டார்கள். காற்றினால் தணிக்க முடியாத தீயின் கடுங்கோபத்தை அரசிலாற்றின் நீர் படிப்படியாகக் குளிர்வித்தது. அப்போதும் நீண்ட நேரப் போராட்டம் தேவைப்பட்டது.

தீயணைப்புப் பணி, மீட்புப் பணி இரண்டிலும் தலைமை தாங்கி உத்தரவுகளைப் பிறப்பித்ததுடன் நில்லாது தானே நேரடியாகவும்



சடுபட்ட விஜயாலயன் ஒரு கட்டத்தில் அருகிலிருந்த ஒரு வீட்டிலிருந்து பீதி கலந்த அபயக் குரல் எழக் கேட்டு, பாய்ந்து, தீப் பிழம்புகளினூடே இருந்த குறுகிய இடைவெளிகளில் புகுந்து சென்றான். அங்கே ஒரு தாய், பத்துப், பன்னிரண்டு வயதினரான தன் பெண்ணும் பிள்ளையும் பீதியுடன் தன்னைக் கட்டி அணைத்து நெஞ்சில் முகம் புதைத்திருக்க, "ஐயோ! இந்தக் குழந்தைகளைக் காப்பாற்றுங்களேன்!" என்று அலறிக்கொண்டிருந்தாள். தீச் சுடர்களின் நிழல்கள் அவர்கள் உடலெங்கும் நெளிக் கோலமிட்டன. விஜயாலயன், "தாயே! என்னுடன் வாருங்கள், சீக்கிரம்!" என்றான்.

"ஐயா! நான் விதவை, செத்து மடிந்தாலும் பாதகமில்லை, வீர சொர்க்கத்தில் என் கணவனைச் சந்திப்பேன். குழந்தைகளைக் காத்தருளுங்கள்" என்று கெஞ்சினாள். சிறுமியைத் தூக்கிக் கொண்டு வெளியே ஓடினான் விஜயாலயன். பாதுகாப்பான இடத்தில் விட்டு விட்டு புகை நெஞ்சை நிறைப்பதைத் தவிர்க்க மூச்சை அடக்கிக் கொண்டு மறுபடி தீக்கங்குகளினூடே பாய்ந்தான். இம்முறை அந்தப் பன்னிரண்டு வயதுப் பாலகனைத் தூக்கிக்கொண்டான். அதிகரித்து விட்டிருந்த காற்றில் சீறிப் பாய்ந்த தீ நாக்குகளிடமிருந்து அச்சிறுவனையும் தன்னையும் காத்துக்கொள்ள இங்குமங்கும் பாய்ந்து ஏய்த்தபடி தப்பி வந்தான். வெளியே, தங்கையுடன் அண்ணன் சேர்ந்து கொண்டதும் இருவருமாகச் சேர்ந்து "அம்மா! அம்மா!" என்று சோகமாகப் புலம்ப ஆரம்பித்தார்கள்.

"டேய்! தங்கைக்குத் தைரியம்கூறித்தேற்ற வேண்டிய நீயே அழலாமா? நிறுத்து!" என்று அதட்டி அடக்கிய விஜயாலயன் மூன்றாவது முறையாக அந்த வீட்டுக்குள் புகுந்தான். இது அசட்டுத்தனம் என்பது பதினாறே வயது நிரம்பிய இளவலுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. இருந்தாலும் அந்தக் குழந்தைகளின் வேதனைக் குரல் அவன் இதயத்தைத் தாக்கி வீர உணர்வை அளவுக்கு அதிகமாகவே தூண்டி விட்டது.

இன்றைய தீவிபத்தில் நூற்றுக் கணக்கானோர் உயிர் துறக்கப் போவது நிச்சயம் என்றாலும் தீக்கிரையாகாமல் அதிகப்பட்சம் எத்தனை பேரைக் காக்க முடியுமோ பார்க்கலாம் என்று உறுதி பூண்டிருந்த அவன் தயங்காமல், யோசிக்காமல் ஜுவாலைகளை ஊடுருவினான்.

குழந்தைகளின் தாய் தன் முடிவு நெருங்குவதை அறிந்தவளாகக் கண் மூடிக் கரம் கூப்பித் தன் கணவனைத் தியானித்துக் கொண்டிருந்தாள். நடுகற் கோயிலில் துயில் கொண்டிருக்கும் அவனை விளித்து, தன்னை அழைத்துக் கொள்ளுமாறும், குழந்தைகளை இப்போது ஒரு வாலிபன் வடிவில் எதிர்பாராமல் வந்து காத்தது போலவே எதிர்காலத்திலும் அவர்களுக்குத் துணை இருக்குமாறும் வேண்டினாள்.

"தாயே!" என்று அழைத்த விஜயாலயன், விளித்த ஒலி அடங்கு முன்னரே



அவனைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு வெளியே ஓடினான். அதே கணத்தில் கூரை பெயர்ந்து விழ, உத்தரங்களுள் ஒன்றின் முனை அவன் தலையைத் தாக்க, புகை வாடையுடன் கேசம் பொசுங்கும் நெடியும் கலந்து அவன் நாசிகளைத் தாக்கியது. பொங்கிய குருதி, தீயில் கலக்கிற சத்தம் கேட்டது. ரத்தத்தை ஆகுதியாக்கிக் கொண்டு தீ பரவ, சுரீலென்று தலையில் தோன்றிய எரிச்சல் வலக் கன்னத்தில் இறங்கிப் படர்ந்தது. கண்ணீர் சுரந்தது. பார்வை மங்கியது. வேதனையில் தடுமாறினாலும் தளராத இளவல் பரபரப்புடன் முன்னேற, முறிந்த விட்டத்தின் ஒரு கூரிய முனை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த நிலையிலேயே அவன் வலக் கண்ணில் பாய்ந்து...

அதை எண்ணினால் இப்போதும் உடல் சிலிர்க்கும் விஜயாலயனுக்கு. அன்று உத்தேசமாக ஒரு ஐம்பது அறுபது பேர்களையாவது அவன் காப்பாற்றியிருப்பான். கடைசியாக அவன் நன்றிக்குப் பாத்திரமானவர்கள் அந்த விதவைத் தாயும் அவளுடைய மகனும் மகளும்.

தீயும் அதனால் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஏற்பட்ட துன்பங்களும் அனைவருக்கும் தணிந்து நீண்ட காலமான பிறகு ஒரு நாள், விஜயாலயனின் அந்தரங்கப் பணியாளன் நுளம்பன் அவனை அணுகி, ''இளவரசே! அரண்மனை வாசலில் குதிரை வியாபாரி ஒருவன் வந்திருக்கிறான். காத்திருந்து, தங்களுக்கு வசதிப்படும்போது தரிசித்துச் செல்ல ஆவலாய் இருக்கிறான்'' என்றான்.

குதிரைவியாபாரியைச்சந்திக்காமல் திருப்பி அனுப்பிவிட எந்த நாடாளும் மன்னன்தான் துணிவான்? என்றைக்கும் தேவைப்படுகிற ஆனால் அபூர்வமாகவே கிடைக்கிற விலங்காயிற்றே!

வியாபாரியைப் பார்த்த உடனேயே விஜயாலயனுக்கு அடையாளம் புரிந்துபோயிற்று. பழையாறையில் அன்றொரு நாள் பரவிய பெருந் தீயிலிருந்து தன்னால் மீட்கப்பட்ட பிறகும் பயத்திலேயே நீண்ட நேரம் அழுது கொண்டிருந்த சிறுவனல்லவா இவன்! இன்று எவ்வளவு வாட்ட சாட்டமாய் வளர்ந்து செல்வச் செழிப்பில் மிதந்து, தன்னம்பிக்கையுடன் கம்பீரமாகக் காட்சி தருகிறான்!

''ஜெயசிங்கா!'' என்றதுமே, ''பிரபோ! இத்தனை காலமாகியும் என் முகம் மட்டுமின்றிபெயரும்தங்களுக்குநினைவிருக்கிறதா?'' என்று புளகாங்கிதமுற்றுக் கூறியவாறே இளவரசனின் காலடியில் எண்சாண் கிடையாக விழுந்தான் அந்த வியாபாரி.

''எழுந்திருக்கலாம்'' என்று அனுமதி தந்த விஜயாலயன் ஜெயசிங்கனைப் பார்த்த போது அடைந்த ஆச்சரியத்தை விடப் பன்மடங்கு அதிகமாக அவன் குதிரைகளைக் கண்டு வியந்தான். குதிரைகளைச் சோதிப்பதில் விஜயாலயன் நிபுணன். இவற்றின் பற்களைச் சோதித்தான், கால்களை உருவினான், அடிவயிற்றைத் தடவினான். அத்தனையும் அற்புதமான உயர் ஜாதிப் புரவிகள்.

''ஜெயசிங்கா! பலமான இக் குதிரைகளைப் போல உன் வாழ்க்கையும் வளமாக இருப்பதாகத்தான் தெரிகிறது.''

''தாங்கள் போட்ட பிச்சை பிரபோ! நிலிபத்தில் பாதிக்கப்பட்ட எங்களுக்குத் துயர் நிவாரணமாகச் சில பொற்காசுகளைத் தந்தீர்களே, அதுதான் என் வாணிபத்துக்கு மூலதனம்.''

''உனக்கு மட்டுமா? வீடு வாசலிழந்த எத்தனையோ மக்களுக்குத் தந்தேன். எவ்வளவு பேர் உன் நிலைக்கு உயர்ந்தார்கள்? உன் திறமையும் உழைப்பும் உன்னை வளர்த்தன.''

''திருமகள் அருளும் இருந்தது.''

''நல்லது. விலை பேசலாமா?''

''இவற்றுக்குத் தாங்கள் கொடுப்பதை ஏற்பேன் பிரபோ! ஆனால்....''

''ஆனால்.....?''

''வியாபாரம் தொடங்கு முன்னர் என் நன்றிக் கடன் தீர்க்க அனுமதிக்க வேண்டும். சிரமம் பாராது சற்று இப்படி வருகிறீர்களா'' இவ்வாறு ஜெய்சிங்கன் கூறி, சோழ மாளிகையின் வலப்புறம் இளவரசனை அழைத்துச் சென்றான். ''பிரபோ! அப்பாலிருப்பதை என் அன்பளிப்பாகத் தாங்கள் ஏற்று என்னைப் பெருமைப்படுத்த வேண்டும்!'' என்று அவன் கூறி நின்றுவிடவும் இளவல் மாளிகையின் முனை திரும்பிப் பார்க்கவும் சரியாக இருந்தது. அங்கே....

சேணம், கடிவாளம் ஏதும் பூட்டப் பெறுமல், காற்றிலே அலை பாயும் பிடரி மயிர் தவிர அலங்காரம் ஒன்றுமே இல்லாமல் பிறந்த மேனியாக ஒரு குதிரை! செழித்து வளர்ந்த பேரழகி ஒருத்தி தன் நிர்வாண எழிலைக் கணவனுக்குக் கூச்சமின்றிப் புலப்படுத்துவது போல் காட்சியளித்தது அந்தக் கருநிறக் குதிரை! பார்க்கப் பளபளப்பு, காட்சிக்குக் கம்பீரம், வியத்தகு வளர்ச்சி, நெஞ்சை அள்ளுகிற அழகு, தடவ வழுவழுப்பான பட்டுடல்! விஜயாலயனின் கவனத்தை முழுமையாக ஈர்த்து இதயத்தைக் கொள்ளை கொண்டு விட்ட அந்தக் குதிரை 'பரணி' என்ற பெயர் பெற்றது.

''அன்று முதல் எங்கு சென்றாலும்உடன் வந்த பரணியை இன்று விட்டுப் பிரிந்து வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது எனக்கு'' என்று கூறும்போதே விஜயாலயனுக்குக் குரல் சற்றுக் கம்பியது.

''பிரபோ! பரணிக்கு என்ன நேர்ந்தது?'' என்று கவலையும் பரபரப்புமாகக் கேட்டான் ஜெயசிங்கன்.

''ஒன்றுமில்லை அப்பனே! அது எப்போதும்போல் ஆரோக்கியமாகத்தான் இருக்கிறது. ஆனால் அது என்னோடு வந்தால் பழையாறை சோழ மாளிகையின் குதிரை லாயத்தில் இராது. அங்கு பரணி இல்லையெனில் விஜயாலயனும் பழையாறையில் இல்லை என்றாகும். பல்லவ மாதண்ட நாயகர்பாராசிரயனுக்குச் சந்தேகங்கள் எழும்!''

நண்பர்கள் இருவரும் குளித்துப் புசித்து, தற்போது தனிமையில் தாம்பூலம் தரித்தபடி



அச்சமின்றி மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள். தீபங்கள் ஏற்றப்பட்டிருந்தன.

''இளவரசே! பரணி அரண்மனை வாயத்தில் இருந்தால் நீங்களும் பழையாறையில் இருப்பதாகக் கருதுவாரா பாராசிரயன்? அவ்வளவு சுலபமாக ஏமாந்து விடுவாரா?''

''மாட்டார்! அதனால் இன்னொரு விஜயாலயனை உருவாக்கி அரியாசனத்தில் அமர வைத்துவிட்டு வந்திருக்கிறேன்'' என்ற விஜயாலயன் இடி இடி யென்று சிரித்தான்!

''பிரபோ! தங்கள் மாயா ஜாலங்களுக்கு ஓர் அளவே இல்லை போலும்! இருந்தாலும் தங்களைப் போல வேடமணிவது என்ன அவ்வளவு சுலப சாத்தியமா?''

''அதுதான் மிக எளிது ஜெயசிங்கா! என் முகத்தின் பெரும் பகுதியை நான் தழும்புகள் தெரியாதவாறு ஒளித்துத் தலையலங்காரம் செய்து கொள்கிறேன். ஒரு கண்ணையும் மறைத்துவிடுகிறேன். எனவே என்னளவு வீரமும் ஆண்மையும் பலமும் இல்லாவிடினும் என்னுடைய உயரமும் ஆகிருதியும் ஒருவனுக்கு இருந்து விட்டால் போதும். அவனைச் சுலபமாக விஜயாலயன் மாதிரி வேஷம் போடச் செய்யலாம்!''

''என்னை வியப்புக் கடலில் ஆழ்த்தித் திக்கு முக்காடச் செய்கிறீர்கள். ஆனால் தங்களைப் போல் உடையணிந்தால் போதுமா? தங்களுடைய நடை.... பாவனை....?''

''சரியான கேள்வி! என்னைப் போலவே நடிக்கத் தகுதியான ஒருவனைத்தான் நியமித்திருக்கிறேன்.''

''யார் அவன்?''

''வேறு யார்? என் ஒற்றர் தலைவன் ஆகவமல்லன்தான்! தகுதி இல்லாமலா அவன் ஒற்றர் தலைவன் என்ற பதவியை என்னிடம் பெற்றான்? நான் அவனுக்கு அளித்த பல்வேறு விதமான பயிற்சிகள்தாம் வீண் போகுமா? அவனைத் தவிர வேறு யார் அவ்வளவு திறம்பட நடிக்க முடியும்? தேவையானால் என்னைப் போலவே அவன் குரல் கொடுத்துப் பேசவும் செய்வான்!''

திகைத்துப் பேச்சிழந்த ஜெயசிங்கன் சற்று நேரம் பொறுத்து ''பிரபோ! என்னதான் இருந்தாலும் இது ஆபத்தான காரியம்தான். பாராசிரயன் தங்களைக் காண வந்து இவனுடன் பேசிக் கொண்டிருக்க அச்சமயம் விபரீதமாகத் தலையலங்காரம் சற்றுக் கலைந்தால்... நழுவினால்...''

''அப்படி யதேச்சையாக நேர்ந்தாலும் எனக்கிருப்பது போன்றே அவன் வலது கன்னத்திலும் மெய்யான தீத் தழும்புகளைத்தான் காண்பார் பாராசிரயன்! தலையிலும் கேசம் பொசுங்கித் தீத்தழும்புகளுடன் சொட்டை விழுந்திருக்கும்!''

''இளவரசே! எனக்கு ஒன்றும் புரியவில்லை!''

''நண்பா! உன்னையன்றி நான் யாரிடம் மனம் விட்டுப் பேசப் போகிறேன்? ஆனால் அதை நாளை வைத்துக் கொள்வோமே? பயணக் களைப்பு அசத்துகிறது; உண்ட மயக்கம் வேறு'' என்றான் விஜயாலயன். ஒரு கொட்டாவி பிரிந்தது.

''அப்படியே ஆகட்டும் பிரபோ!'' என்ற ஜெயசிங்கன் கை தட்டியதும் ஒருவர் பின் ஒருவராக இரண்டு மூன்று பெண்கள் கால் சதங்கை ஒலிக்கவும் அங்கங்கள் குலுங்கவும் ஓடோடியும் வந்தனர்.

''மதாலசாவைக் கூப்பிடு'' என்றான்.

அவர்கள் தலைகள் மறைந்தன. சற்று நேரத்தில் அதுவரை அம்மாளிகையில் விஜயாலயன் பார்த்த அழகிய பணிப் பெண்கள் அனைவரையும் வெட்கித் தலைகுனியச் செய்கிற பேரெழிலுடன் ஒரு பெண் அங்கு வந்து நின்றாள்.

''இந்த அராபிய வியாபார நண்பர் இன்றிரவு நமது மாளிகையிலேயே தங்குகிறார். நமது சிறப்பு விருந்தினர் அறை சித்தமாக இருக்கிறதல்லவா?'' என்று ஜெயசிங்கன் கேட்க,

''ஆம், ஐயா'' என்றாள் மதாலசா.

பின்னர் அவள் அராபியனைப் பார்த்துப் புன்னகை பூத்தபடி, கன்னங்கள் குழிய, முத்துப் பற்கள் ஒளி சிந்த, ஒய்யார நடை பயில எடுப்பான அங்கங்கள் அனைத்தும் போட்டியிட்டுக் கவனத்தை ஈர்க்க அவனை நெருங்கி பூப்போன்ற விரல்களால் அவன் வலக்கரத்தைப் பற்றி மெல்ல இழுத்தாள்.

தன்னுடன் வணிக உறவு கொள்ளும் அதி முக்கியமான நபர்களைச் சிறப்பாகக் கவனித்துத் திருப்திப்படுத்திப் பயன் அடைகிற ஜெயசிங்கன், அதே வியாபாரத் தந்திர நோக்குடன் கூடிய உபசாரத்தைத் தனக்கும் அளிக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட விஜயாலயன், அதைத் தவிர்க்கவும் முடியாமல், ஏற்கவும் மனமில்லாமல் தான் தவிப்பதை வெளிக் காட்டிக் கொள்ளவும் இயலாமல் போகப் பேசாமல் அந்தச் சந்தன வண்ணப் பட்டு மேனியாளைப் பின் தொடர்ந்தான்.

மதுக் கோப்பையை நிரப்பிக் கொண்ட ஜெயசிங்கன் வதனத்தில் ஒரு குறும்புப் புன்னகை அரும்பியது! (தொடரும்)

''தலையிலே குடுமி'' எங்களைச் சிரிக்க வைத்து வயிற்றைப் புண்ணாக்கி விட்டது. இது போன்ற நாடகங்களை மேலும் ஒளி பரப்பவும், நாடகாசிரியர் கோ.கி.சு. சுப்பு அவர்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

இப்படிக்கு,
கோ. கி. சு. சுப்பிரமணி
கோ. கி. சு. சுபா
கோ. கி. சு. ரமா
கோ. கி. சு. பாச்சா
கோ. கி. சு. கோபால்
-வெ. சீதாராமன்



# உள்ளும் புறமும் உயர்சிறப்பு




* தனிச்சிறந்த ஃபாக்டரி ஸீல்
* நீடித்த உழைப்பு
* கசிவில்லாதது

# பிலிப்ஸ் பாட்டரிகள்

டார்ச்சு, டிரான்சிஸ்டர்களுக்கு உங்கள் முதல் விருப்பம்; உலக தர எலக்டிரானிக் பொருள்களைத் தயாரிப்போர் அளிக்கிறார்கள்.

பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்

HTB-PEL-7910




# பிலிப்ஸ்

டைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

# பழந்தீவு பன்னீராயிரம்

கோவி மணிசேகரன்



நீங்கள் தஞ்சைக் கோபுரத்தில் ஒரு சீனனுடைய சிலையைப் பார்த்திருக்கிறீர்களா? கதையைப் படியுங்கள். பார்க்கவில்லையா? படித்துவிட்டுப் பாருங்கள்.

அந்தச் சின்னச் சின்னத் தீவுகளின் மீது கதிரவனின் பொற்கரங்கள் பட்டுப் பிரகாசிக்கிறபோது....

ஆ! கடலழகி, ஏதோ புதுப் புதுப் பொன்னாபரணங்களில் நவமணிகளை இழைத்து அணிந்து கொண்டது போன்ற ஒரு புதுப் பொலிவு!

நுரைகளில் மட்டுமே விழுந்து புரண்டு மகிழ்ந்து ஆர்ப்பரிக்கும் நுரைப் பறவைகள் கடற்கரையைக் கலகலப்பாக்குகின்றன.

அந்தப் புதுவிதமான வெண்ணிறப் பறவைகளைக் கூர்ந்து கவனித்தாலும், சாங்கியாங் தனது எண்ணப் பறவையை எங்கோ சிறகடிக்கச் செய்து கொண்டிருக்கிறான்.

இப்போது அவளது கற்பனை, அவளது கனவுகள், நினைவுகள்—

'ராஜ ராஜ சோழன்; ராஜ ராஜ சோழன்' என்றே முனகின.

ஓ...அவர்தான் என்ன அழகாக இருக்கிறார், தங்கத்தில் செதுக்கிய புத்தர் முகம் மாதிரி....'

சாங்கியாங்குக்குளெப்போதும் புத்தருடைய ஒளி நிறைந்த புன்னகை முகம்தான் நினைவுக்கு வரும். சீனர்களிடையே அப்படி ஒரு முகத்தைப் பார்த்ததேயில்லை; பழந்தீவு பன்னீராயிரத்திலும் பார்க்க முடியவில்லை.

புத்தர் பிறந்தது நாவலந்தீவு. (இந்தியா)

அவள் நாவலந்தீவின் முதல் அழகனைச் சந்திக்கிறாள். அவர்...

ராஜராஜ சோழன்.

எனவே புத்தரை ஒப்பிட்டு நோக்குகிறாள்.

பின்னால் யார் வருகிறார்கள்...

திரும்பிப் பார்க்கிறாள்.

ராஜராஜசோழர்.

எழுந்துகொள்கிறாள்.

ஆ! தொட்டால் சிவக்கும் தாமரை இதழனைய செம்மேனி அவளது திருமேனி.

மினுமினுக்கும் இளங் கருமேனியுடைய ராஜ ராஜசோழர், எத்தனை முறைதான் இந்தச் சீன அழகியைக் கண்டு வியந்திருக்கிறார்...

'சோ'வென்று கடலலைகள்மோதுகின்றன.

''சாங்கியாங்! எப்போது வந்தாய்?''

ராஜராஜ சோழன் தமிழில் இவ்வாறு கேட்டாலும், கைகளால் சமிக்ஞை செய்து கேட்கத் தவறவில்லை. அவர்கள் பாஷை புரியாத ஊமைகள்.

ஒரு சமயம் ''சாங்கியாங்*'' என்றால் என்ன அர்த்தம்?'' என்று ராஜ ராஜ சோழர் கேட்டுவிட்டார்.

''சீன நாட்டின் மிகப் பெரிய நதி. அந்த நதிக் கரையில் நான் பிறந்ததால் அப்பெயரிட்டார்கள்'' என்று சாங்கியாங் கூறப் புரியவைக்கப் பட்டபாடு...

மணலில் சித்திரம் வரைந்து புரியவைக்க வேண்டியதாயிற்று. சீன மொழியே சித்திர மொழிதானே!

''பிரபோ! நாளைய கழித்துப் புறப்படும் பிரயாணத்தின்போது நானும் உங்களுடன் வருகிறேனல்லவா?''

சில கணங்கள் நீல நீர்ப் பரப்பை நிதானமாகக் கவனிக்கிறார் ராஜ ராஜ சோழன்.-

---

* சீனப் பெருநதியின் பெயர்: Yangtze Kiang சாங்கியாங் என்று சீனர்கள் அழைப்பர்.



தொலைவில் நங்கூரம் பாய்ச்சப்பட்ட ஏராளமான மரக்கலங்கள். அனைத்துமே 'சாங்கியாங் கேள்விக்கு என்ன மறுமொழி?' என்று கேட்பன போன்ற பிரமை. அந்தக் கேள்வியில்—

—ஒரு சீனப் பெண் காதலியாகவோ அல்லது ஆசை நாயகியாகவோ தேவைதானா?

—நாங்கள் பழந்தீவு பன்னீராயிரத்துக்குப் புறப்பட்டுப் பல மாதங்கள் ஆகின்றன. எங்களுக்குத் தாயகம் நோக்கிச் செல்லும் ஆசை இல்லையா?

இரண்டு விதமான அர்த்தங்கள் இருந்தன.

தஞ்சையில் முந்நூறு தேவர் அடியாள்களை அழைத்துக் குடியேறச் செய்த ராஜ ராஜ சோழருக்கு இந்தச் சீனக் காதலி ஒரு பிரச்னையாகிவிட முடியாது. பின் ஏன் யோசிக்க வேண்டும்?

இவளால் ஏதேனும் உற்பாதம்..

அழைத்து வந்தவர் சோழ சக்கரவர்த்திகள்; அமர்க்களப்படப் போவது சோழ சாம்ராஜ்யம்....

பின்ஏன்யோசிக்க வேண்டும்?

''நானே முடிவைச் சொல்வேன் சாங்கியாங்!''

''தயவு செய்து, அழைத்துச் செல்ல முடியாது என்று சொல்லி விட வேண்டாம்.''

ராஜ ராஜ சோழரிடம் கேள்விக் குறியான பெருமூச்சு.

''பிரபோ. ஏறத்தாழ நாம் நாற்பது நாட்களாக ஒருவரையொருவர் நேசிக்கிறோம். பல சமயம் என்னை புரிக்கச் சொல்லுகிறேன். இந்தத் தனிமையான ஏகாந்தம்...''

''சாங்கியாங்!என்னுடன் புறப்பட ஆசைப்படுகிறவளுக்கு ஏனிந்த அவசர ஆசை?''

சீன மொழியை மந்திரம் போல் பேசும் சின்ன உதடுகள் சிருங்காரமாய்ச் சிரிக்கின்றன.

''நீங்கள் என்னை விட்டு விட்டுப் போய் விடுவீர்களேயானால் அதே ஏக்கத்தில் நான் இறந்துபோய்விடுவேனோ என்கிற பயம்! அல்லது தமிழகத்துக்கு வந்த பிறகு தமிழக அழகிகள் முன் நான் சாதாரணமாகப் பட்டு விடுவேனோ என்கிற பயம்! இங்கே பூரணமாக—ஏகாந்தமாக.....''



''சாங்கியாங்!''

கம்பீரமான யுத்தக் குரல் மாதிரி...

சாங்கியாங் குலுங்கி அழத் தொடங்க...

அவளைத் தமது பரந்த விழுப்புண் வடு மார்பில் போட்டுத் தேற்றுகிறார் சோழ சாம்ராஜ்யத்தின் சொர்க்க பூபதி — அருண் மொழி வர்மர் — ராஜ ராஜ சோழர்.

**பு**லி உறுமும் புகழ்க் கொடியின் கீழ் வலிவார்ந்த சோழப் பேரரசைச் சொப்பன புரியாக்க — சொர்ணபுரியாக்க — சொர்க்க புரியாக்கக் கனவு கண்டு கொண்டிருக்கும் ராஜ ராஜ சோழர், என்ன நினைத்தோ பழந்தீவு பன்னீராயிரத்தின் மேல் படையெடுத்துப் புறப்பட்டார். பொன் மணிக் குவியல்களே இம்மாதிரியான தீவுகளில் தான் இருக்கின்றன என்ற எண்ணத்தில் புறப்பட்டு விட்டார்.

பழந்தீவு பன்னீராயிரத்து மக்கள் தமிழ் மொழியின் ஆதிவாசிகளேயானாலும், நாகரிகத்தில் அவர்கள் கபாடபுரத்தை நினைவு கூர்ந்து கொண்டிருந்தார்கள். அதுவே அசலான நாகரிகம் என்பது அவர்களது அபிப்பிராயம். பிறழவில்லை.

கடற்கரையில் மரக் கலங்கள் வந்து நின்றபோது—

ஓ....அவர்கள் கண்ட மகிழ்ச்சி...

புலிக்கொடி....

ராஜ ராஜ சோழச் சக்கரவர்த்தி...

அவரவர் ஆயுதங்களை வீசி எறிந்துவிட்டு ஆரவாரக் குரலுடன் தங்கள் தமிழ் பெற்ற சக்கரவர்த்திகளை வரவேற்கக் குதூகலித்த குதூகலிப்பு....

சோழக் கலங்கள் அனைத்தையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

நாளைய மறுநாள் சோழ நாடு நோக்கிப் புறப்பாடு! ஆகா! இந்த மூன்று மாத காலத்துக்கு மேலான நாட்களில் இந்த ஆதிவாசிகள் படைத்த விருந்துபசாரம்....

மனைவி: அய்யய்யோ எல்லோரும் ஓடிவாங்க! யாரோ ஒருத்தன் குண்டாய் என் பக்கத்திலே படுத்திருக்கான்?

கணவன்: கத்தாதேடி. நான் தான் இது. ராத்திரி பூரா கொசுக் கடியால் உடம்பு பூரா வீங்கிக் குண்டாத் தெரியுது. -எஸ். அறிவுடை நம்பி



ஆதி தமிழர்களின் உளப்பண்பை எண்ணிப் பூரித்துப் போனார் புலிக் கொடிப் புரவலர்.

சாங்கியாங் சீனப் பெரு நாட்டின் 'தங்' வமிசத்துக்குரியவள். பெண் லோலனுன நாங் வமிசத்து வழி வந்த ஓர் இளவரசனுடைய கெடுபிடிகள் தாங்க மாட்டாது புறப்பட்ட அகதிகளுடன் புறப்பட்டவர்கள் ஸுமா குவாங் என்பவனும் அவனது காதலி சாங்கியாங்கும்.

கடாரம் முதல் சம்பகத் தீவு வரை அந்த அகதிகள் பரவிச் சென்றனர்.

சம்புத் தீவில் ஏகாந்தமாகச் சிறகடித்துப் பறந்து வாழ ஆசைப்பட்டபோது எங்கிருந்து முளைத்தான் இந்த ராஜ ராஜ சோழன் என்கிற எரியும் பிரச்னைக்கு ஆளான ஸுமா குவாங், எரியீட்டியைக் கையிலேந்தி விட்டான். காதல் பகைக்கு முன்னே காவலனுனால் என்ன? காவலனேயானுல் என்ன?

இப்போது ஸுமா குவாங் சிறையில் அடைபட்டுக் கிடக்கிருன்.

**இ**ரவின் முதல் யாமம் கழிந்தது.

நாளைய முதல் நாள் பொழுது விடிகிற போது — சோழ சேனைகள் புறப்படுகிற போது — அவன், ஸுமா குவாங் நரபலியாகப் போகிறுன்.

சோழ சாம்ராஜ்யாதிபதி நீடூழி வாழ்ந்து நிலைப்பேறுகள் பல பெறவேண்டும் என்பதற்காக அத்தீவு மக்களின் வழக்கப்படி — மரபுப்படி ஒரு நரபலியிட்டு வழிகூட்டி அனுப்ப வேண்டும்.

ராஜ ராஜ சோழரைக் கொலை செய்ய முயன்றபோது அகப்பட்டுக் கொண்டவன் ஸுமா குவாங். அவனையே பலியிட்டு விடுவது என்று தீர்மானித்து விட்டார்கள், அத்தீவின் அறங்காவலர்கள்.

ராஜ ராஜ சோழரின் இதயம் எதை எண்ணி இவ்வாறு துடிக்கிறது?

அவர் தமது உற்ற பாதுகாவலர்களுடன் சிறைக் கூடம் நோக்கி நடக்கிறுர்.

ராஜ ராஜ சோழர், அவனை — ஸுமா குவாங்கை — உற்றுக் கவனித்தார்.

சாகப் போகிறேம் என்பதற்காக இவன் சஞ்சலக் கண்ணீர் வடிக்கிறுனு?

''ஏன் அழுகிறுய்? மரணத்துக்குப் பயந்தா? என்னைக் கொல்ல வந்தாயே அப்போது எனது மரணம் குறித்து யோசித்துப் பார்த்தாயா? சோழ ராஜ்யத்தின் தலையான உயிர் என்று யோசிக்காமல் என்னைக் கொல்ல வந்ததன் நோக்கம்?''

மொழிபெயர்ப்பு நடக்கிறது.

''நீங்கள் என் காதலியை அபகரிக்கிறீர்கள்.''

பல கண்களில் பல்வேறுபட்ட வியப்புச் சாயல்கள்.

''சாங்கியாங், உனது காதலியா?''

'ஆம்' என்பது போலத் தலையசைத்த ஸுமா குவாங், அவள் பொருட்டே நாகரிக மிக்க — விஞ்ஞான அறிவு மிக்க சீனப் பெரு நாட்டை விட்டே ஓடிவர நேர்ந்த கதையைச் சொல்லுகிறுன். காதல் பொருட்டு நாடு விட்டு நாடு வந்த கதை. ஒரு காவியக் கரு போன்று தெரிகிறது. ஸுமா குவாங் மேலும்

## புதிய
## கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்

# பல்லுக்கு உறுதி தருவது



குழந்தைகளுடைய பற்களின் மென்மையான எனாமல் எளிதில் துவாரங்களுக்கும் சிதைவுக்கும் உள்ளாகிறது. பெரியவர்களுக்கும் பற்சிதைவுக்கு எதிராக பாதுகாப்பு தேவை.

புதிய ஃப்ளோரிகார்ட் டூத் பேஸ்ட் பல் துவாரங்களுக்கும், பற்சிதைவுக்கும் எதிராக உங்கள் குடும்பத்தினருக்கு நிச்சயமான பாதுகாப்பைத் தருகிறது. துவாரங்களையும், பற்சிதைவையும் உண்டாக்கும் வாய் அமிலங்களுக்கு எதிராகப் பற்களை உறுதிப்படுத்துவதற்கென பல் எனாமலுடன் இணைந்து செயல்படும் விசேஷ கோல்கேட் எம்எஃப்பி ஃப்ளோரைட் அதில் உள்ளது.

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் புல்லரிக்கும் புதுச்சுவை கொண்டது. உங்கள் குடும்பத்திற்கு இன்றே வாங்குவீர்.




உலகெங்கும் உள்ள ஆராய்ச்சிசாலைகளில் சோதிக்கப்பட்டுள்ள எம்எஃப்பி ஃப்ளோரைட் துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராகப் பற்களை உறுதிப்படுத்துகிறது என்பது மருத்துவ ரீதியாக நிரூபணமாகியுள்ளது. கோல்கேட்டின் தனி ஆராய்ச்சி மட்டுமே இந்த தனிப்பட்ட எம்எஃப்பி ஃபார்முலாவை உங்களுக்கு வழங்க முடியும்.






## ஃப்ளோரிகார்டில் உள்ள எம்
## எ.ஃப்.பி ஃப்ளோரைட் எனாமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

சொன்னான். "மாமன்னரே! நான் ஒரு கட்டிடக் கலை நிபுணன். வான சாஸ்திரி. எனக்குள்ள கௌரவம் சீன நாட்டில் அநேகம். எனது அறிவைப் பயன்படுத்திக்கொள்வதற்கு மாறாக, சீன இளவரசன் என் காதலியைப் பயன்படுத்தவே ஆசைப்பட்டான். அதனால் எல்லாவித சௌகரியங்களையும் துறந்து ஏகாந்தமாக இருக்க இந்தத் தீவு நோக்கி வந்தோம். இங்கே விதி உங்கள் ரூபத்தில் முளைத்திருக்கிறது."

"நான் அவளைக் காதலிக்கவில்லை."

"தெரியும். அவளே உங்களை வலிந்து காதலித்தாள். அவளது சீன அழகில் நீங்களும் உங்களைப் பறிகொடுத்து விட்டீர்கள். தயவு செய்து எங்களை வாழ விடுங்கள். நான் பிரதி உபகாரமாக எனது அறிவை உங்களுக்குக் காணிக்கையாக்குவேன்."

அறிவு...

தமிழறிவுக்கு மிஞ்சியா?

ஆயினும் சீன நாட்டின் விஞ்ஞானப் பேரறிவை ராஜ ராஜ சோழர் அளவுக்கு மீறிய கேள்விப்பட்டிருக்கிறார்.

நீண்ட நாட்களாகவே தஞ்சையில் ஒரு புதுமையான கோவிலை நிர்மாணிக்க அவரது பேரறிவு எங்கெங்கோ அலைந்து கொண்டிருந்தது. தமிழகத்தில் ஓர் அதிசயக் கோயிலாக அது இருக்க வேண்டும்; பல்லவர்கள் சமைத்த கற்றளிகளை விட கலை நுட்பம் வாய்ந்ததாக அது வியப்பை விழிகளில் தேக்கக் கூடியதாக இருக்க வேண்டும்...

அவர் தமது எண்ணத்தை அவனிடம்—ஸுமா குவாங்கிடம் சொல்லுகிறார்.

அவன் சாதாரணமாகச் சிரிக்கிறான்.

அசாதாரணமாக ஒரு கோயில் சமைக்க வேண்டும் என்று சொன்னால் இவன் சாதாரணமாகச் சிரிக்கிறானே...

"அரை வண்டி செங்கற்களைக் கொண்டு வாருங்கள். என்னைக் கொஞ்சம் வெளியில் விடுங்கள்!"

எதற்காக அவன் இப்படிக் கேட்கிறான்?

ஆணை பிறக்கிறது. அவனும் திறந்து விடப்படுகிறான்.

சிறைக்கூடத்தை விட்டு ஒரு பரந்த இடம் வெளிக்கு வருகிறார்கள். அவனால் மன்னருக்கு எந்தத் தீங்கும் நடந்துவிடக் கூடாது என்பதில் மெய்க்காவலர்கள் மிகக் கவனமுடன் இருக்கிறார்கள்.

வானத்தை வெகு நேரம் அண்ணாந்து பார்த்த ஸுமா குவாங், அட்ச ரேகையைக் கணக்கிடுகிறான். பிறகு செங்கற்களை அகல அடுக்கி, பிறகு மேலே அடுக்கிக் கொண்டு போகிறான்.

"சக்கரவர்த்திகளே! நாளைய காலையில் சூரியோதயத்துக்குப் பிறகுவந்து பாருங்கள். இந்தப் பொம்மைக் கோயிலின் நிழல் தரையில் இருக்காது. நிழல் கோபுரத்துக்கு மேலேயே படிந்திருக்கும்."

வியக்கிறார் ராஜ ராஜ சோழர்.

"இந்தப் பொம்மைக் கோயிலின் அட்ச ரேகைக் கணக்கு இது. உயரமான கோபுரக் கணக்கை நான்தானே வந்து அளவிட வேண்டும்?"

'ஓ....தேடியவன் கிடைத்து விட்டான்.'

அனைவரையும் சற்று விலகியிருக்குமாறு சொல்கிறார்.

"குவாங்! உனக்கும் சாங்கியாங்குக்கும் உடலுறவு உண்டா?"

"உண்டு."

"நீ பொய் சொல்ல மாட்டாய் என்று நினைக்கிறேன்."

"என் புத்த பகவான் மீது சத்தியம்!"

"எனது புறப்பாட்டின்போது உனக்கு விடுதலை கிடைக்கும். இதுவும் சத்தியம்."

ஸுமா குவாங் அடைந்த மகிழ்ச்சி எல்லையற்றது. நரபலியிலிருந்து தப்பினான்.

**ம**று நாள்—

மண்டையைப் பிய்த்துக் கொண்டாள் சாங்கியாங்.

தனது காதலை ராஜ ராஜ சோழர் ஏற்க மறுத்து விட்டார்.

எப்படியாவது தனிமையில் — எந்தச் சாம்ராஜ்ய சிந்தனையுமற்று ராஜ ராஜ சோழரை அடைந்து இன்புற வேண்டும் என்று எதிர்பார்த்த அதிலும் ஏமாற்றமே மிஞ்சியது.

"நீ உன் காதலனை அடைந்து எங்கள் பண்புப்படி கற்புள்ளவளாய் இருக்கிறாய்... என்னையும் அடைந்து உனது அறிவார்ந்த புருஷனிடம் விபசாரியாக ஒப்படைக்க ராஜ ராஜன் விரும்பவில்லை."

ஸுமா குவாங்...

இதையுமா சொல்லித் தொலைத்தாய்?

**பொ**ழுது பொல்லென்று விடிந்துகொண்டிருக்கிறது.

கிடைத்த செய்தி...

பலிபீடத்தில் தன்னைத் தானே வெட்டிக் கொண்டு ரத்த வெள்ளத்தில் மிதந்து கிடக்கிறாள் சாங்கியாங்...

எல்லாரும் பதறியடித்துக் கொண்டு ஓடுகிறார்கள்.

சம்பத் தீவுத் தலைவனுக்கு ஓர் உள்ளார்ந்த நிறைவு.

எப்படியோ...

சோழ சாம்ராஜ்யாதிபதிக்கு ஏதும் குந்தகம் ஏற்படாது.

சோழமா சக்கரவர்த்தியின் கண்களில் இரு நீர்த் திவலைகள்.

ஓ...அவள் தன்னை அதிகமாகவே நேசித்திருக்கிறாள்....

அமைதியாகப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஸுமா குவாங்கை நோக்குகிறார்.

"ஸுமா குவாங்! உங்கள் கவலையை அழகு மிக்க சோழ நாடு மறக்கச் செய்யும். என்னுடன் புறப்படுகிறீர்கள்."

சாங்கியாங்கின் மறைவு அவனுக்குத் துக்கமளிக்கவில்லை. அது ஒரு முரண்பட்ட காதல்!

சோழ சக்கரவர்த்தியின் உத்தரவு மகிழ்ச்சி அளித்தது.

அவன் கண் முன்னே.

ராச ராசேச்சரம் எழுந்து கொண்டிருந்தது.

# உங்கள் நெற்றியின் 'சிங்காரம்' போலியானதா?

## சிங்கார் குங்குமப் பொட்டு வாங்கும்போது, கவனமாக சோதித்து அசலாக வாங்கவும்.,

போலிகளின் தந்திரங்களை அறிந்து கொள்ளுங்கள்:



இதுதான் எங்கள் அசல் சின்னம். K,M,ம் போன்ற எழுத்துக்கள் மூலம் உங்களை ஏமாற்ற முயலுகிறார்கள்.




**Shingar**

இதுதான் எங்களது பெயர் —பல ஆண்டுகளாக உங்கள் நம்பிக்கையைப் பெற்றிருப்பது. அதன் எழுத்துக்கள் S-h-i-n-g-a-r- 'சிங்கார்' என்று எழுதப் பட்டிருக்கும். நீங்கள் எங்கள் மீது வைத்திருக்கும் அபார நம்பிக்கையைப் பயன்படுத்தி, போலித் தயாரிப்பாளர்கள், அந்த எழுத்தைப்போல எழுதி ஏமாற்றுகிறார்கள், உதாரணம், Shingari, Shrinagar, Shimgar.

எங்கள் பேக்கிலே இந்த வட்டமான திலகம் இருப்பது உங்களுக்கு நன்கு தெரிந்ததே. ஆனால் உங்களை ஏமாற்றுவதற்காக போலித் தயாரிப்பாளர்கள் ⊙,○,□,◊ போன்றவற்றை செய்கிறார்கள்.

உங்கள் சருமத்தைப் பாதுகாப்பதற்கேற்ப உன்னத பொருட்களால் உருவானது அசல் சிங்கார் குங்குமப் பொட்டு. கலையாதது, சீர் குலையாதது, உரியாதது, பிரிந்து விழாதது. போலி குங்குமப் பொட்டுக்களில் இத்தகைய நன்மைகள் ஏது? மாறாக, போலிகள் உங்கள் மென்மையான சருமத்தை கெடுத்து விடலாம்.

அதற்கு இடம் கொடுக்காதீர்கள்.
இப்போதே எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுங்கள்.





# சிங்கார்
## குங்குமப் பொட்டு

அழகின் வண்ணம், நம்பிக்கைச் சின்னம்.

everest/81/SH/376 tam

## 'சரிதா'ம்மா

'அம்மா' படத்தில் குழந்தை விமலுடன் நடித்துக் கொண்டிருந்தார் சரிதா.

கட்டிலில் படுக்க வைத்து 'ஆராரோ' பாடிக் குழந்தையைத் தூங்கவைக்கும் காட்சி.

'டேக்' முடிந்ததும் விமலின் முகத்தில் வேர்வையைத் துடைத்து விட்டு அதே துணியால் தமது முகத்தையும் துடைத்துக் கொண்டார். விமல் துள்ளிக் குதித்து செட்டில் ஓடி விளையாடினான்.

''இந்த வருடம் நான் நடித்துக்கொண்டிருக்கும் அத்தனை படங்களிலும் எனக்குக் குழந்தை இருக்கிறது'' என்றார் சரிதா—சர்வ சாதாரணமாக.

''தண்ணீர் தண்ணீர் படத்தில் தங்களுக்கு நல்ல காரெக்டர் கிடைத்த மாதிரி நடித்துக் கொண்டிருக்கும் படங்களில் எதைச் சொல்லலாம்?'' என்றேன்.

''இந்தப் படத்தில் (அம்மா) ரொம்பவும் சிறப்பான காரெக்டர். கே. ஆர். ஜி.யின் 'நெஞ்சில் ஓர் ராகத்திலும்' நல்ல ரோல் செய்துள்ளேன். பாலசந்தர் இயக்கும் 'கோகிலாம்மா' தெலுங்குப் படத்திலும் அப்புடித்தான்'' என்றார்.

''இந்த வருடம் அகில இந்திய சிறந்த நடிகைக்கான விருது தங்களுக்குத்தான் கிடைக்கும் என்று திரை உலகில் பேசிக் கொள்கிறார்களே! நீங்கள் அப்படி நினைக்கிறீர்களா?'' என்று கேட்டதும் சிரித்தவாறே ''அதில் எனக்கு நம்பிக்கை இல்லை'' என்றார். அது சரியாகப் போய்விட்டது. போயும் போயும் ரேகாவுக்குக் கொடுத்திருக்கிறார்கள்!



## ராஜ்குமாரின் வௌகிகம்

கன்னட நடிகர் ராஜ்குமார் கடந்த இரண்டு மாதங்களாகச் சென்னையிலேயே தங்கி 'காளிதாஸ்' என்கிற கன்னடப் படத்தில் நடித்து வருகிறார்.

அவரை ஒரு விழாவில் பாட அழைக்க ஒரு நண்பருடன் போயிருந்தேன்.

''என் மகளைப் பிரசவத்துக்கு ஆஸ்பத்திரியில் சேர்த்துள்ளேன். இன்று அல்லது நாளை பிரசவமாகலாம். (இச் செய்தி அச்சேறும் நேரத்தில் ஆணா, பெண்ணா என்று தெரிந்திருக்கும்) நான் முதன் முதலாகத் தாத்தாவாகப் போகிறேன். என் மகளிடம் அட்வான்ஸாகவே சொல்லி வைத்து விட்டேன், என் பேரன் என்னைக் கண்டிப்பாக நாலு பேர் மத்தியில் தாத்தாவென்று அழைக்கக் கூடாது என்று'' சிரித்தபடியே ஜோவியலாகச் சொன்னார்.

தனக்குத் திருமணமாகி ஒன்பது ஆண்டுகள் வரை குழந்தையே பிறக்காமல்இருந்ததையும் அப்பொழுது உறவினர்களின் குழந்தைகளை எடுத்து வளர்த்ததையும் கூறிவிட்டு, ''அவர்களெல்லாம் எனக்கு ஏற்கனவே பேரன் பேத்திகளைப் பெற்றுத் தந்து விட்டனர்'' என்றார்.

தமிழ்ப் பட உலகில் உள்ள பிரபல நடிகர்கள் இப்படிப்பட்ட லௌகிகமான விஷயங்களை மனம் விட்டுப் பேசுவதில்லை என்பதால் ராஜ்குமார் அவர்களிலிருந்து சற்று வித்தியாசமாகவே தோன்றினார்.

அவர் நன்றாகப் பாடக் கூடியவர் என்று எனக்குத் தெரியும். ஆனால் தமது குரலைத் தெய்வீக கைங்கரியங்களுக்காக மட்டுமே அவர் பயன்படுத்துகிறார் என்னும் விஷயம் தெரியாது.

ராகவேந்திர சுவாமிகளின் அறக் கட்டளையின் அனுமதியின்றி எங்கேயும் அவரது குரல் ஒலிக்காதாம்.

அதை அறிந்ததும் அவரைப் பாட அழைக்காமலே, பேசிவிட்டுத் திரும்பி விட்டேன்.










**ப**றக்கும் மனிதன்! சூப்பர்மேன்!

வசூலில் உலகச்சாதனை ஏற்படுத்தியபடம். படத்தைப் பார்த்தவர்கள் மனிதனால் பறக்க முடியும் என்று நம்பினார்கள். ஜன்னல் வழியே பாய்ந்தவர்கள்கூட உண்டு! அவ்வளவு அற்புதமான ஸ்பெஷல் எஃபெக்டுகள்! அதற்காகக் கிடைத்தது அகாடமி அவார்ட்.

இப்படி ஒரு சாதனையை ஏற்படுத்தியபிறகு சூப்பர்மேனை ஹாலிவுட் சும்மா விட்டு வைக்குமா? சூப்பர்மேன்-2 தயாரிப்பில் இறங்கியது.

ஆனால் 'அதைத் தொடர்ந்து இது' என்று சொல்ல முடியாது என்கிறார் தயாரிப்பாளர். பார்க்கப்போனால் இந்த இரண்டாவது படத்தின் கதைக்குத்தான் முதலில் திரை வடிவம் தரவிருந்தார்களாம். பின்னால் ஏனோ மனம் மாறியிருக்கிறார்கள். சரி, சூப்பர்மேன்-2 கதை என்ன?

மெலிதான, ஆனால் தகர்க்க முடியாத, கண்ணாடி போல் ஊடுருவி நோக்கக் கூடிய கூண்டு ஒன்று எங்கோ விண்வெளியில் சுற்றுகிறது. இந்த 'ஃபான்டம் ஸோன்' உண்மையில் ஒரு சிறைச்சாலை. அடைபட்டிருப்பவர்கள் கிரைப்டான் கிரகத்தின் மூன்று கேடிகள். ஒருவன் தன்னை உள்பட எதையுமே பெரிதாக எண்ணும் பைத்தியக்காரன் —ஜெனரல் ஸாட். நெ. 2: பேரழகும், கொடூர உள்ளமும் கொண்ட பெண் உர்ஸா. நெ. 3: ராட்சஸ வடிவமும் அரக்க குணமும் கொண்ட நோன். இவர்களுக்கு சூப்பர்மேனுக்கு இணையான அபார சக்தி உண்டு!

இவர்கள் பூமியை அடைந்துவிட்டால் உலக நாகரிகம் அழிந்து போகும். அந்த ஆபத்து நிகழவே செய்கிறது. யதேச்சையாக, சூப்பர்மேனே இதற்கு அவனையும் அறியாமல் காரணமாகிறான்!

இம்மூவரிடமிருந்தும் பூமண்டலத்தைக் காக்க சூப்பர்மேன் போராடுகிறான். வெற்றி அவனுக்குத்தான். ஊகிப்பது கடினமல்ல. ஆனால் அந்த வெற்றியை அடைய அவன் நடத்தும் சாகசங்கள்? அதுதான் படம்!

—த.மு.ரா.

### பொன்சேகா வழங்கிய தீர்ப்பு

● 'நீலத் திரைகடல் ஓரத்திலே' என்னும் ஒரே ஒரு தமிழ்ப் படத்தில் கதாநாயகனாக நடித்த காமினி பொன் சேகாவைப் பாராட்டிப் பேசினார் டைரக்டர் ராஜசேகர் (அம்மா டைரக்டர்)

''இலங்கையில் இவர் சிறந்த நடிகராகவும் டைரக்டராகவும் விளங்குகிறார். நம்ம ஊரில் எம். ஜி. ஆர். — சிவாஜி இவர்களுக்கு என்ன மதிப்போ அத்தனை மதிப்புள்ளவர். பழகுவதற்குத் தங்கமானவர். நைஸ் ஜென்டில்மேன்'' என்று புகழ்ந்துவிட்டு அவரைப் பற்றிய சுவையான செய்தி ஒன்றையும் கூறினார்.

அங்கே நடைபெற்ற ஒரு வழக்கை மையமாக வைத்து பொன் சேகா ஒரு படத்தைத் தயாரித்து முடித்தாராம். அந்தப் படத்தை வெளியிட கோர்ட் தடை விதித்து விட்டது. காரணம் வழக்கு நடைமுறையில் இருக்கும் போது அதே வழக்குக்குத் தீர்ப்புச் சொல்லும் வகையில் அத்திரைப்படம் உருவாக்கப்பட்டிருந்ததுதான். படம் வெளிவந்தால் இதுதான் அவ்வழக்கின் தீர்ப்பு என்று ஊர்ஜிதமாகி விடும் என்பதால் தடை விதித்தார்கள்.

இரண்டு ஆண்டுகள் படத்தைத் திரையிடாமலேயே வைத்திருந்தார். அதன் பிறகு வழக்கு விவகாரம் முடிந்து நீதிபதி தீர்ப்புக் கூறிவிட்டார். படமும் தடை நீங்கி வெளிவந்தது.

நீதிபதி என்ன தீர்ப்புக் கூறியிருந்தாரோ அதே தீர்ப்பைப் பொன் சேகா இரண்டு வருடங்களுக்கு முன்பே தம் படத்தில் வழங்கியிருந்தாராம்.



# சினிமா

## நன்றி சொல்கிறார்கள்!

''தங்களுக்கு விளம்பரம் தேடித் தந்த ஏதற்காவது நன்றி சொல்லுங்கள்'' எனச் சில சினிமா நட்சத்திரங்களைப் பார்த்துக் கேட்டால் யார் யார் எதற்கு, எப்படி நன்றி சொல்வார்கள் என்று எனக்கு நானே கற்பனை செய்து பார்த்தேன்.

'வேடிக்கையான தேங்க்ஸ்' பிறந்தது.

மாதவி: டபுள் பீஸ் ஸ்விம் சூட்டுக்கு நன்றி அதைப் போட்டுண்டு 'டிக்...டிக்...டிக்' படத்திலே நடிச்சதுக்கு அப்புறம்தான் எனக்கு ஏகப்பட்ட பப்ளிசிடி கிடைச்சது. பேப்பர்காரங்க போட்டி போட்டுண்டு என்னைத் தேடி வந்தாங்க.

ரஜினிகாந்த்: நான் பாலசந்தருக்கு நன்றி சொல்றேனோ இல்லையோ சிகரெட்டுக்கு சொல்லியே ஆகணும். நான் ஸ்டைலா தூக்கிப் போடறப்போ அது 'லபக்'னு வாயிலே போய் உட்காரலேன்னு என் மானமும் போயிருக்கும். இத்தனை புகழும் வந்திருக்காது. தேங்யூ சிகரெட்!

தியாகராஜன்: என் கண்களுக்குத்தான் சொல்வேன். அதைத் தானம் செய்யறதா கேஷுவலாச் சொன்னாலும் சொன்னேன். அடேயப்பா! என் கண்ணாலேயே நம்ப முடியலே. அத்தனை நியூஸ்.

சந்திரசேகர்: நான் வேறு யாருக்கு சார் நன்றி சொல்வேன்? தாடி, ஒன்னைத் தவிர? அதை வெச்சாலும் எழுதறாங்க எடுத்தாலும் எழுதறாங்க. தாங்க் யூ தாடி.

ஸ்ரீதேவி: மூக்குக்கு நன்றி. நான் பொறந்தது முதல் என் மூக்கு என் கூடவே இருக்கு. இருந்தாலும் அத்தோட அருமை எனக்குத் தெரியலே. ஏதோ சதை வளர்ந்ததேன்னு சின்ன ஆபரேஷன் செய்துக்கப் போக பேப்பர்காரங்க எனக்கு என்ன பப்ளிசிடி கொடுத்தாங்க தெரியுமா? மூக்குக்கு மேலே விரல் வெச்சுட்டேன்!

ஜெய்சங்கர்: காளை மாட்டைத் தெய்வமா நெனைக்கிறேன் நான். என் வாழ்க்கையிலே ஒரு பெரிய 'டர்னிங் பாயின்டை' ஏற்படுத்தியதே இந்தக் காளைதானே! அதாவது முரட்டுக் காளை. அதுக்குத்தான் நன்றி சொல்லப் போகிறேன்.

ஸ்மிதா: நான் கத்தரிக்கோலுக்குத்தான் சொல்வேன். எப்படி எப்படி யெல்லாமோ என்னை ரசிகர்கள் பார்க்கிறதுக்கு 'பர்மிஷன்' கொடுக்கிறது அது தானே? அதுக்கு நன்றி சொல்ல மறந்தால் எனக்குத்தான் ஆபத்து, அடுத்த படத்திலே!



# ஓட ஓட விரட்டினால்...

ஜோதிர்லதா கிரிஜா

வள்ளியப்பன் வழக்கத்தை விடச் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார். கதவைத் திறப்பவர் கண்ணுக்கு அவர் சட்டென்று தெரியாத அளவுக்கு அவர் மேசை மீது கோப்புகள் கோபுரங்களாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. இரண்டு வார விடுப்புக்குப் பிறகு வந்துள்ள அவரை ஒரு மலைப்பு ஆட்கொண்டிருந்தது. அன்றாட வழக்கப் பணிகளுடன் இரண்டு வாரத்து வேலைகளும் முடித்தாக வேண்டிய நெருக்கடி.'

ஒவ்வொன்றாக எடுத்து அவற்றைப் பார்க்கப் பார்க்க, வெறும் சாதாரண முடிவெடுக்க வேண்டியவற்றைக்கூட வைத்துவிட்டார்களே என்று கொதித்துப் போனார். கழுப்பாளிகள் மற்ற அலுவலர்களுக்குக் கடுக்காய் கொடுப்பது மாதிரி தம்மை ஏமாற்ற முடியாது என்பது உண்மையானாலும் தம்மையும் சிலர் அவ்வப்போது ஏமாற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள் என்பது உறைத்தது.

அதற்கு விதிவிலக்காக அவர் நுழைந்தது கூடத் தெரியாமல் எழுதிக் கொண்டோ, கோப்பைப் படித்துக் கொண்டோ வேலையில் மிகவும் ஆழ்ந்திருக்கும் சிலரும் அவரது பிரிவில் உண்டுதான். அப்படி ஆழ்ந்திருப்பவர்களில் அவருக்கு மிகவும் பிடித்தமானவர்கள் பெண்களில் விஜயாவும், ஆண்களில் கணபதியும் ஆவர்.

யோசித்துக் கொண்டே தலையை உயர்த்திய வள்ளியப்பன், வியப்படைந்தவராக, ''ஆயுசு நூறு உங்களுக்கு'' என்று அப்போது அறைக்குள் நுழைந்த விஜயாவை வரவேற்றார்.

''என்ன சார் இது? இப்படிக் குவித்து வைத்திருக்கிறது உங்கள் முகமே தெரியாமல்?''

அவர் சொன்னார். சொல்லிவிட்டு, ''என்ன ஆபீசம்மா இந்த ஆபீஸ்? எவனும் ஒழுங்காய் வேலை செய்ய மாட்டேன் என்கிறானே?'' என்று அலுத்துக் கொண்டார்.

விஜயா அதற்குப் பதில் சொல்லாமல், ''எனக்கு ஒரு மாதம் லீவு வேண்டும், சார்! என் மாமியாருக்கு உடம்பு சரியில்லை. போன மாதம் முழுவதும் என் நாத்தனார் — அவளும் வொர்க்கிங் வுமன்தான் — லீவ் போட்டுவிட்டுக் கவனித்துக் கொண்டாள். அதற்கு முந்திய மாதம் என் மாமியாரின் தங்கை வந்திருந்தார். இப்போது....''

''உங்களுடைய முறையாக்கும்?''

''ஆமாம் சார். ப்ளீஸ், அப்புறம் பேச்சுக் கேட்க வேண்டி வரும்.''

''உங்க ஹஸ்பெண்டைப் போடச் சொல்லுங்களேன்.''

''அவருக்கு அன்யுவல் இன்ஸ்பெக்ஷன்''

''உங்களுக்கும்தான் அன்யுவல் இன்ஸ்பெக்ஷன்!''

''ஆம்பிள்ளைகள் ஒத்துக்கொள்வார்களா, சார்?'' என்று கேட்டுவிட்டு அர்த்தமுள்ள புன்னகை ஒன்றை விஜயா புரிந்தபோது, அவரால் பதில் சொல்ல இயலவில்லை.

''அப்படியானால் ஒன்று செய்யுங்களேன். இரண்டு வார லீவு தருகிறேன். கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ளுங்கள்....''

''என்ன சார் இது? அப்புறம் எக்ஸ்டென்ஷன் தரத் தகராறு பண்ணுவீர்கள். ப்ளீஸ்ஒரு மாதமாகவேகொடுத்துவிடுங்கள்.''

வள்ளியப்பன், ''நோ, நோ! இரண்டே வாரங்களில் நீங்கள் வந்தே ஆக வேண்டும். இதோ பாருங்கள். எத்தனை ஃபைல்கள் குவிந்து கிடக்கின்றன! எல்லாம் முக்கியமானவை. தயவு செய்து எப்போதும்போல் ஒன்பதரை மணிக்கெல்லாம் வந்துவிடுங்கள்'' என்றார்...

தன் இருக்கைக்குப் போன விஜயா, நடந்ததைக் கணபதியிடம் சொல்லிவிட்டு, ''நாம் பேசி வைத்துக்கொண்டுதான் சேர்ந்தாற் போல் லீவில் போகிறோம் என்று நினைத்துக் கொள்ளப் போகிறார். ஆனால் வேறு என்ன செய்வது? உங்களுக்கும் லீவு தேவை. எனக்கும் தேவை....'' என்று சிரித்தான்.

சற்றுப் பொறுத்துத் திரும்பி வந்த கணபதி, ''விஜயா வேறு லீவு கேட்பதால் இப்போது உனக்குத் தர முடியாது என்கிறாரே. ஆனமட்டும் கேட்டுப் பார்த்தேன். அசைவேனா என்கிறார் மனுஷன். எம். ஸி.தான் கொடுக்கும்படி இருக்கும் போலிருக்கிறது. அது மாதிரிப் பண்ண வேண்டாம், உண்மையாக நடக்கலாம் என்று பார்த்தால் விட மாட்டார்கள் போலிருக்கிறதே!'' என்று அவளிடம் அங்கலாய்த்தான்.

''சொல்லாமல் கொள்ளாமல் மட்டம் போடுகிறவர்களுக்குத்தான் கணபதி இது காலம். நாம் இருவருமே அப்படிச் செய்திருக்க வேண்டும். ஓசைப்படாமல் எம்.ஸி. கொடுத்திருந்தால் வம்பே வந்திருக்காது. இப்போது நீங்கள் எம். ஸி. கொடுத்தால் அவருக்குக் கசப்பு ஏற்படும்.''

''பரீட்சைக்குப் படிக்க வேண்டும் என்பது முக்கியமானதுதானே? 'உனக்கென்னப்பா? நீ லீவ் எடுத்துப் படிக்காமலே பாஸ் செய்து விடுவாய்' என்று ஐஸ் வைக்கிறார்.''

''யோசிக்கச் செய்யுங்கள் மிஸ்டர் கணபதி! பத்து மணி ஆபீசுக்குப் பத்தரைக்கு வருகிறவர்களுக்குத்தான் இது காலம்.!''

அப்போது ''ஸ்ஸ்ஸ்.... அப்பாடா... என்ன வெய்யில், என்ன வெய்யில்!'' என்று முனகியவாறு ராஜதுரை பிரிவுக்குள் நுழைந்தான். கணபதி கடிகாரத்தைப் பார்த்தான். மணிபதினொன்று.முக்கால்வாசிநாட்களுக்குப் பத்தேகால் பத்தரை என்றுதான் வருவான். இன்று இன்னும் மோசம். கேட்டால் ஆயிரம் காரணம் சொல்லுவான்.

கண்டிப்புக்குப் பெயர் போன வள்ளியப்பனால் இவனை ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று நினைத்தான் கணபதி. 'மெமோ' கொடுத்தால் விடுப்பில் போய்விடுவான். அவன் இடத்துக்கு ஆள் போடுவதிலேயே பதினைந்து நாள் தாமதம் விளைந்து விடும். இதனால் தாள்கள் தங்கிப் போகும் என்பதுதான் காணும் பலன்.

''நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் மிஸ்டர் கணபதி?''

''நான் பேசாமல் மெடிகல் சர்ட்டிபிகேட் கொடுத்து விடுகிறேன்.''

''கோபித்துக் கொண்டால்?''

''கோபித்துக் கொள்ளட்டும். ராஜதுரையைப் போன்றவர்களிடம் தங்கள் பாச்சாப் பலிக்காத இந்த ஆபீசர்கள் நம்மை விரட்டுகிற விரட்டலில் பாதியையாவது கழப்பாளிகளிடம் காட்டினால் எல்லா கவர்ன்மெண்ட் ஆபீஸ்களும் உருப்படும். ஆனால் இவர்கள் விரட்டுவதெல்லாம் நம்மைத்தான். மெடிகல் சர்ட்டிபிகேட் அனுப்புகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். லீவ் மறுக்கப்பட்டதால்தான் அனுப்பியிருக்கிறான் என்ற கோபத்தில் செகண்ட் மெடிகல் ஒபினியனுக்கு எம். வி.யை வேறொரு டாக்டருக்கு அனுப்பி என்னை டீஸ் பண்ணினாலும் பண்ணுவார். பண்ணட்டும். காசை நீட்டினால் செகண்ட் என்ன தேர்ட் மெடிகல் ஒபினியன்கூட எனக்குச் சாதகமாய்க் கிடைக்காதா என்ன?'' என்று கணபதி ஆத்திரமாய்ச் சொன்னான். பதினைந்து ஆண்டு வேலைக் காலத்தில் ஒரு தடவை கூடப் பொய்யான மருத்துவச் சான்றிதழ் விடுப்பு எடுத்தறிந்திராத கணபதியை விடுப்பு மறுக்கப்பட்டால் பல்லைக் கடித்துக் கொண்டு பேசாமல் இருந்து விடும் வழக்கமுள்ள கணபதியை — விஜயா வியப்புடன் பார்த்தாள்.

''பின்னே என்ன மிஸஸ் விஜயா! ஒரு நாளுக்குப் பத்துப் பேப்பர் டிஸ்போஸ் பண்ணினால் போதும் என்றிருக்கிறது. ஆனால் நீங்களும் நானும் கிட்டத்தட்ட பதினாறு பேப்பர் பண்ணுகிறோம். இதைத் தவிர அவன் லீவு, இவன் லீவு என்று லீவில் போகிறவர்களுடைய அர்ஜண்ட் பேப்பர்களையெல்லாம் வேறு அவ்வப்போது நம் தலையில் கட்டிவிடுகிறார்கள். ஒன்பதே கால் — ஒன்பதரைக்கெல்லாம் வந்து விடுகிறோம். அதுவும் அவருக்குத் தெரியும். இதெல்லாம் தெரிந்தும் விரட்டினால் என்ன அர்த்தம்? சாதுமிரண்டால் காடு கொள்ளாது என்பதை இவருக்குப் புரியவைக்க வேண்டும். நீங்களும் பேசாமல் மெடிகல் சர்ட்டிபிகேட் அனுப்பி மேலும் பதினைந்து நாட்களுக்கு எக்ஸ்டென்ஷன் வாங்கிக் கொண்டு விடுங்கள். இனிமேல் நாமும் கணக்காகப் பத்துப் பேப்பர்தான் போட வேண்டும்!'' என்றான்.



# இம்மாத ரத்தினம்

ஏப்ரல் மாதத்தில் பிறந்தவர்களுக்குரியது வைரம் (DIAMOND) என்று சொல்வார்கள். இது வெண்மை, மஞ்சள், பழுப்பு, ஆகிய நிறங்களில் இருக்கும். பச்சை, நீலம், சிவப்பு அல்லது கருப்பு ஆகிய நிறங்களிலும் காணப்படுவதுண்டு. ரத்தினங்களின் கடினத்தன்மையை மோஸ் அளவில் மதிப்பிடுவார்கள். இதன் கடினத்தன்மை 10. வைரம், அமைதி, களங்கமின்மை, நாணயம், நேர்மை ஆகியவற்றைக் குறிக்கும்.



# என்றும், எங்கும், ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ரத்தினம்

# இந்தியன் பாங்க்

வங்கிகளுக்கு அடிப்படை பணம். தனிநபரும் நிறுவனங்களும், நாடுகளும் செழிப்புற்றிருக்க பணம் உதவுகிறது. ஆக்கப் பணிகளுக்கு பண உதவி தருவதோடு, அனைத்து விதமான நிதி அலுவல்களுக்கும் உதவி செய்கிறோம்.

ஒரு வார்த்தை சொல்லுங்கள். உங்கள் சார்பில் வாடகை, கட்டணங்கள் போன்றவற்றை அவ்வப்போது செலுத்தி விடுவோம். உங்கள் பணத்தை வேறு கிளைகளுக்கோ, வேறு கணக்குகளுக்கோ மாற்றவேண்டுமானால் அதையும் செய்கிறோம். அதோடு உங்கள் செக்குகள், பென்ஷன் தொகை போன்றவற்றை நாங்கள் பெற்றுத்தருகிறோம்.

நலிவுற்றோருக்குக் கடனுதவி அளிப்பதற்காக இந்தியன் பாங்கில் தனிப்பிரிவு இருக்கிறது. சொந்தத் தொழில் நடத்த கடன்தரும் திட்டங்கள் உள்ளன— அதுவும் சலுகை வட்டியில். சிறுதொழில்கள், விவசாயம், ஏற்றுமதி ஆகியவற்றில் தனி கவனம் செலுத்துகிறோம்.

உங்கள் சேமிப்பு, கிடுகிடுவென்று வளர, உங்கள் தேவைக்கேற்ற பல திட்டங்கள் இந்தியன் பாங்கில் இருக்கின்றன.

ADWAVE/IB/1873/9



# இந்தியன் பாங்க்

## உங்கள் செல்வச் செழுமைக்கு உதவும் வங்கி

## இப்போது பவள விழா ஆண்டில் நடைபோடுகிறது.




# எத்தனை தலைகள்?

ராஜ்குமார்





''பொண்ணுது தூர்தர்ஷன்! அம்மா ரூபவாஹினி!... என்ன நான் சொல்றது சரிதானே?''



''அந்த டி.வி. ரூப வாஹினி நல்லா எடுக்குமாம்!''
''இந்த டி.வி. ரூபவாஹினி நல்லா எடுக்குமாம்! தூர்தர்சன் எடுக்காதாம்! இதையே எடுப்போம்!''





ஆச்சரியத்தில் ஆழ்ந்து போகிறீர்களா இந்தப் போட்டோவைப் பார்த்ததும்? நானும் தான் ஆச்சரியப்பட்டேன், முதல் தடவை இந்தப் போட்டோவைப் பார்த்தவுடன். இந்தப் போட்டோவைப் பற்றிய தகவல்களை கே. ஆர். ஸ்டூடியோ திரு ராஜ்குமார் சொல்கிறார்:

''சென்னை தாஜ் ஓட்டலில் ஒரு மருத்துவர்கள் மாநாடு. அப்போது எடுக்கப்பட்டது இந்தப் போட்டோ. 36 ஆசிய- ஆப்பிரிக்க நாடுகளிலிருந்து மருத்துவ அறிஞர்கள் கலந்துகொண்ட அந்த மகாநாட்டை அப்போதைய முதல்வர் கலைஞர் கருணாநிதி துவக்கிவைத்தார். கலந்து கொண்ட ஏராளமான அறிஞர்களை குரூப் போட்டோ எடுக்க சாதாரண காமிராக்கள் பயன்படாது. டெல்லியில் திரு தத் என்பவர் வைத்துள்ள ஒரு பிரத்தியேக சர்க்யூட் காமிராவைக் கொண்டுவந்து போட்டோ எடுத்தோம். அந்தக் காமிராவின் தனிச்சிறப்பு 360 டிகிரி சுழன்று படம் எடுக்கும்! காலை ஒன்பதரை மணிக்குப் புகைப்படம் எடுத்தோம், பதினொன்றரை மணிக்கெல்லாம் புருப் ரெடி. அத்தனை பேரும் போட்டோ பிரதி கேட்டார்கள். தந்தோம். சரி, எத்தனை பேர் குரூப் போட்டோவில் இருக்கிறார்கள்? கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்!''

பேட்டி: சந்திரமௌலி

(சரியான எண்ணிக்கையைத் தபால் கார்டில் மட்டுமே எழுதி அனுப்புகிறவருக்கு ரூ 25 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும். முடிவுதேதி: மே 5. போட்டோ புதிர் என்ற தலைப்புத் தரவும்.)





''பையன் தூர்தர்ஷன்லே வேலை பார்க்கிறான். பேசாமக் கட்டிக்கோ!''
''தூ! தூர்தர்ஷன் வேணும்மா! ரூப வாஹினி மாப்பிள்ளையாப் பாருக்கோ!''

# காற்று கவிதை; தண்ணீர் இசை!

## இதோ ஒரு கிராமம்




**கா**வேரி என்று உச்சரித்தாலே மனசுக்குள் ஒரு குளிர்ச்சி பரவும். இருக்கிற அத்தனை வேலைகளையும், சுமைகளையும், பிரச்னைகளையும் சுத்தமாய் மறந்துவிட்டு அந்தத் தண்ணீருக்குள் மூழ்கிக் கிடக்க மனசு துடிக்கும். திருச்சியில் கால் வைக்கும்போதே அந்த மண்ணும், காவேரி தொடர்ந்து ஓடிப் படித்துறையில் பிடித்துக் கொண்ட பாசிப் பசுமையும், ஸ்ரீரங்கநாதர் ஆலயமும், கம்பீரமான மலைக் கோட்டையும் நினைவுக்கு வந்துவிடும்.

தினசரி தொழிற்சாலை இயந்திரங்களைத் தொட்டு, தொட்டு மரத்துப் போகிற மனசுக்கு இதமாய், என் பிரியமுள்ள காதலி காவேரியைத் தேடி ஓடுகிறபோதெல்லாம், கண்ணில் படுகிற கிராமம் முத்தரசநல்லூர்.

ஹோவென்ற அகன்ற மணற் பரப்பில் காவேரி ஆடி மாசமாய்த்தான் முழுசும் நிரம்பிச் சுமங்கலியாய் சுழித்துச் சுழித்து ஓடுவாள் என்றாலும் மற்ற சமயங்களில் அந்த வெண் மணல் கூட அழகாய்த்தான் மினுங்கும். தன் சிநேகிதி காவேரிக்காய்க் காத்திருக்கும் அந்த மணற் பரப்பின் சோக முகத்தில் கூட நிறையக்கவிதை தென்படும். அந்த மணலின் சோகத்துக்குக் கரையோரமாய், காவேரியின் அணைப்பில் பசுமையாய் விளைந்து கிடக்கிற முத்தரச நல்லூர் வயல்கள்தான் சாமரம் வீசி ஆறுதல் சொல்லும்.

''உங்களுக்குக் குறைகள், பிரச்னைகள் ஏதும்?''

''அதெல்லாம் எனக்குச் சொல்ல வராதுங்க. யாராவது படிச்சவங்களைக் கேளுங்க''

கடைசியில் அத்தனை பேரும் இப்படித்தான் சொல்லுவார்கள். வீதியில் கடைகளில் ஸ்லோ மோஷனில் டீ குடித்துக் கொண்டிருக்கும் கிராமத்து வேஷ்டிகள். நெசவுத் தறிகளின் இரைச்சலும் கொஞ்சமாய். கோவிலும், பள்ளிக்கூடமும் இட்டே, இட்டே இருந்துகொண்டு 'நாங்க ரெண்டு பேரும் ஒன்றுதான்' என்கிறாற்போல ஒரு முகம் காட்டும். தச்சு வேலையும், மட் பாண்டம் வனைதலும் தன்பாட்டுக்கு நடக்கும். மஞ்சளாய் நெருஞ்சி படர்ந்திருக்கும். நகரத்தில் சதாவும் செருப்போடு சுகம் கண்ட கால்கள் ஒரு முறை முள் குத்தும் அனுபவத்தை ரசித்துப் பாரேன் என்று கேட்கும் அடர்த்தி அடர்த்தியாய்த் தென்னந் தோப்புக்களும் மாமரங்களும் தலையசைத்து வாங்க சொல்லும்.

''எங்க தம்பி வந்தீங்க?''

''சும்மா அமைதியை ரசிக்கத்தான்.''

கொஞ்சம் பெருமைப்பட்டுக் கொண்டு, ''இளநீ சாப்பிடறீங்களா, சாப்பாடு இங்கே கிடைக்கும். இந்த இடத்துக்குப் போய்ப் பாருங்கள்'' என்று சொல்லும் வயதானவர்கள் அன்பு. கிராமத்துப் பண்பாடு இதுதான் என்று மறைவாய்ச் சொல்லும். இடையில் அரைஞாண் கயிற்றில் காயப்போட்டிருக்கும் சிறுவர்களின் கோவணம் சிரிக்க வைக்காது. சோளி போடாத பெண் பிள்ளைகள் மார்பை உற்றுப் பார்க்கத் தோன்றாது. அழகையும், அமைதியையும்தான்.

வரப்புக்களில் இடையர்களின் பாட்டும், அதற்குத் துணை போகிற கால்நடைகளின் இசைக் குரலும், தாண்டிப் போனால் வரிசையாய் அக்கிரகாரத்து வீடுகளும், போகிற நேரத்துக்கு ஏற்றாற்போல் பாசுரம் உச்சரிக்கும் ஓசையோ, சோழிகளின் கலகலாவோ நம் அதிர்ஷ்டம். ஊர் நடுவில் தாமரைக் குளமும், ஓலைக் குடிசைகளும் அமைதி, அமைதி என்றுதான் சதாவும் உச்சரிக்கும்.

இங்கே காற்று கவிதை; தண்ணீர் இசை. மனுஷர்களின் தூய உள்ளமும், வயல் பசுமையும், காவேரியின் குளிர்ச்சியும் ஆற்றோரப் படித் துறையும் அத்தனையும் கவித்துவமான ஆதங்கங்களை மனசு முழுக்க நிரப்பும்.

''பிள்ளையாரப்பா, அடுத்த ஜன்மத்திலாவது காவேரியும், வெள்ளை மனசும் நிரம்பின ஒரு கிராமத்தில், பூமித் தாயைக் கொஞ்சிப் பேசுகிற ஒரு விவசாயியாகப் பிறக்க வையேன்.''

—சாருப்ரபா சுந்தர்

# யூ.எல்.ஐ.பி. ✚

## பாதுகாப்புக்கு மறு பெயர்




### அனைத்தும் அடங்கிய ஒரே சேமிப்புத் திட்டம்

லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷன், ஜெனரல் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷன், யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா—மூவரும் இணைந்தளிக்கும் இணையற்ற திட்டம் யூ.எல்.ஐ.பி. + உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் பாதுகாப்பு அளிக்கும் சேமிப்புத் திட்டம்.

யூ.எல்.ஐ.பி. + ன் நன்மைகள்

- உயர்ந்த வருமானம். உங்கள் சேமிப்புத் தொகை ரூ. 12000 திட்ட முடிவில் (10 ஆண்டில்) ரூ. 18000 மாகவும் (15 ஆண்டில்) ரூ. 22000 மாகவும் உயர்ந்து விடுகிறது.
- வரிச்சலுகை. இத்திட்டத்தில் முதலீடு செய்யும் உங்கள் தொகைக்கு பூரண வருமான வரி விலக்கு உண்டு.
- விபத்து பாதுகாப்பு. நீங்கள் எடுக்கும் திட்டத்தின் மதிப்பு எதுவானாலும், ரூ. 15000 வரை உங்களுக்கு விபத்து பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.
- ஆயுள் பாதுகாப்பு. நீங்கள் சேரும் திட்டத்தின் தொகைக்கு சமமாக உங்களுக்கு ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. மருத்துவ பரிசோதனை தேவையில்லை.
- ரூ. 24000 வரை சேமிக்கலாம் ரூ. 12000க்கு ஒரு திட்டமும் அதிலிருந்து 3 வருடங்கள் கழித்து அதே தொகைக்கு மற்றுமொரு திட்டமும் எடுத்துக் கொள்ளலாம்.

பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றே யூ.எல்.ஐ.பி. திட்டத்தில் சேர்ந்திடுங்கள்.

இதர விபரங்களுக்கு எங்களையோ அல்லது எங்கள் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகள் அல்லது உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளையோ அணுகுங்கள்.

எங்கள் தலைமை பிரதிநிதிகள் :

ஏ. தனபால், 10 ஜே. ஹுசைனர் ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் : 34776 (கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக)

எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்துக்காக)

கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007. போன் : 1224 (தஞ்சாவூர் மாவட்டத்துக்காக)




# யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்) தலைமை செயலகம் : பம்பாய்-20

தெற்கு பிராந்திய செயலகம் :
ரெஜினா மேன்ஷன், 46, செகண்ட்லைன் பீச், சென்னை-600 001. தொலைபேசி : 27433

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாகவே இருக்கட்டும்

UTI-101-81-Tam

# தேவையில்லாத சமூக இயல்!



"பட்டது போதும் இப்பட்டத்தால்" என்று அங்கலாய்க்கிறார் இந்தச் சமூக இயல் பட்டதாரி. வேலை தந்து உதவ விரும்புவோர் நேரடியாக இவரிடம் தொடர்பு கொள்ளலாம்.

**வ**யிற்றுக்காகத்தான் படித்தோமே ஒழிய வசதிக்காகப் படிக்கவில்லை, சமூக இயல் துறை பாடம். அப்போது சொன்னார்கள், இது புதுப் பாடம்; நல்ல எதிர்காலம் உண்டு குறிப்பாக Welfare Officer, Rural development Officer வேலைக்கெல்லாம் என்று. அன்றிலிருந்து இன்றுவரை நானும் தினசரி வேலை வாய்ப்புப் பகுதிகள் உள்ள பத்திரிகைகளைப் பார்க்கிறேன். மறந்தாவது ஒரு நாள் கூட தேவை ஒரு சமூகவியல் பட்டதாரி என்று ஒரு அறிவிப்பு வந்ததில்லை.

இப்படித் தன்னம்பிக்கை இழந்த நான் சமூகத்திலிருந்து பிரிந்து செல்லும் சூழ்நிலை உருவாகிறது. இப்படி தனி நபர் விலகிப் போவது அக் குடும்பச் சீர்குலைவையும் குடும்பச் சீர் குலைவு சமூக சீர்குலைவையும், அமைதியின்மையையும் ஏற்படுத்தித் தேசிய சீர்குலைவுக்கே உலை வைக்கிறது.

ஆரோக்கியமற்ற பெண் ஒருத்தி குழந்தை பெற்றது போல் ஆண்டுதோறும் எங்களையும் பல்கலைக் கழகம் உற்பத்தி செய்கிறது. எதற்கெல்லாமோ தடை விதிக்கும் காலத்தில் இப்படி ஒரு பாடத்துக்கு (சமூகவியல்) தடை விதிக்கக் கூடாதா இந்த மக்கள் நல அரசு?

'சோஷியுலாஜி' என்றால் எதைப் பற்றிக் கூறும் பாடம் எனக் கேட்கக் கூடிய நிலைமையில் உள்ள இயல்தான் இவ்வியல். இவ்வாண்டு கூட + 2ல் கேட்பாரற்று அனாதையாக இருந்த பாடங்களில் முதன்மையான இடம் வகிப்பது இப்பாடம்.

அஞ்சல் வழியாகப் படிப்பவர்கள் (பட்டத்துக்காக) பல பேர் இப் பாடத்தைத் தேர்வு செய்துள்ளனர். ஏனெனில் இலகுவாக வெற்றி பெறலாம் என்ற நப்பாசை.

பட்டது போதும் இப்பட்டத்தால்.

- ரா. முருகேசன்

பெயர்: ரா. முருகேசன்

முகவரி: 13/81, குழிவிளை மணவாளக் குறிச்சி
குமரி மாவட்டம் - 629252

வயது: 26

கல்வித்தகுதி: சமூகவியல் முதுகலைப் பட்டம்

---

# பிடித்ததும், பிடிக்காததும்!



**அட்டைப்படத்தில் காட்சிதரும் குமாரி நிஷாவுக்குப் பிடித்தவை :**

தலையில் சூட ரோஜாப் பூ
விளையாடப் பெரிய பொம்மை
கொத்துத் திராட்சை
கொட்டும் மழை
பி. சுசிலா, முகமது ரஃபியின் பழைய பாடல்கள்

**பிடிக்காதவை :**

ஜோக் என்ற பெயரில் அறுவை
அம்மாவின் கட்டாயத்துக்காகக் கட்டும் புடைவை
சமையல் செய்வது
கிளாஸ் கட் செய்து சினிமா போக அது அம்மாவுக்குத் தெரிய வருவது

**நமக்கு நிஷாவிடம் ரொம்பப் பிடித்தது :**

ரம்ஜான் போது நாகூர் செல்லத் தவறாத முஸ்லிமான போதிலும் சாந்தோம் சர்ச், மாங்காடு கோயில் ஆகியவற்றையும் தரிசிக்கத் தயங்க மாட்டேன் என்று அவர் சொல்வது!

பேட்டி: சிக்கி
வண்ணப்படம் எடுத்தவர்: பிரபாகர்

நீங்களே கணக்கிட்டு பாருங்கள்!

300 கிராம்
ரூ. 3·20

# ஒரு சாதாரண டிட்டர்ஜண்ட் சலவை கட்டியை விட எடையோ இரண்டு மடங்கு விலையோ சிலகாசுகள்தான் அதிகம்

# டோட்டல்

## நீல டிட்டர்ஜண்ட் சலவை பார்







சுலபமான
சலவைக்கு
5 சிறிய பகுதிகள்

உண்மையான முதல் டிட்டர்ஜண்ட் பார்!
டோட்டல், நீல டிட்டர்ஜண்ட் சலவைக் கட்டியின் அதிக வெண்மையையும், சலவை பார் சோப்பின் சௌகரியத்தையும் கொடுக்கிறது.
சிக்கனமாக சலவை செய்ய இதை 5 சிறிய பகுதிகளாக்கி உபயோகிக்கலாம்.
எடையோ இரண்டு மடங்கு விலையோ சில காசுகள்தான் அதிகம்!
நீங்கள் 125 கிராம் எடையுள்ள சாதாரண டிட்டர்ஜண்ட கட்டியை என்ன விலைக்கு வாங்குகிறீர்கள்?
300 கிராமின் விலை ரூ. 3.20 என்றால் 250 கிராம் டோட்டலின் விலை ரூ. 2.67 தான். அதாவது ஒரு சாதாரண சலவைக் கட்டியைவிட எடையோ இரண்டு மடங்கு, விலையோ சில காசுகள் தான் அதிகம்.

தமிழ் நாடு, பீஹார் மற்றும் ஆந்திர பிரதேஷ் மாநிலங்களில் மட்டும் கிடைக்கும்.

MCA-TDB-51-Tam

---

கர்நாடக சோப்ஸ் அண்ட் டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேலஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.



# மாதம் ஒரு புத்தகம்

மகா கவி பாரதி நூற்றாண்டு பலருக்கு ரொம்பவும் உபயோகமாக இருந்திருக்கிறது. — தமிழக அரசுக்கு; அரசியல்வாதிகளுக்கு; பத்திரிகைகளுக்கு; புத்தக பிரசுரகர்த்தர்களுக்கு. உருப்படியான ஒரு புத்தகம் எழுதவும் தூண்டியுள்ளது. தி. சா. ராஜு தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலிய பல மொழிகளைக் கற்றுத் தேர்ந்த எழுத்தாளர். 'மகாகவி பாரதியார் கவிதையும் வாழ்க்கையும்' என்ற தலைப்பில் அவர் எழுதிய நூல் மார்ச் வெளியீடுகளில் நமது பார்வைக்கு வந்தவற்றுள் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டு நூலாசிரியருக்கு பேனா பாய்பாயிண்ட் செட் பரிசும் பெற்றுத் தருகிறது.

பாரதி தொடாததுமில்லை; தொட்டுப் பொன்னாகாததுமில்லை. பாரதியின் வசன கவிதையே புதுக் கவிதைக்கு ஆதாரம்— என்று முன்னுரையில் அடித்துச் சொல்கிற ஆசிரியர் புதுப் புதுக் கோணங்களில் மகா கவியைச் சந்திக்க வைக்கிறார். ''இசை'' தலைப்பில் குறிப்பிடுகிறார்:

''தெருவிலே 'ராமாரி' என்று கூவிப் பிச்சை எடுக்கும் பெண்களைக் கவனித்திருக்கிறீர்களா? ''மாயக்காரனம்மா, கிருஷ்ணன் மருடிக்காரனம்மா'' என்ற பாடலைக் குறிப்பிட்ட சந்தத்தில் அவர்கள் வெகு இனிமையாகப் பாடுவார்கள். இந்த மெட்டை அந்தப் பிச்சைக்காரர்களின் சந்தத்திலிருந்து கடன் வாங்கியிருக்கிறான். ''மாயச் சூதினுக்கே'' என்று தொடங்கி ''நாட்டை வைத்திடென்றான்'' என்பது வரை நம்மை உருட்டுகிறான்.''

''மாடிழந்துவிட்டான் — தருமன்
மந்தை மந்தையாக
தாய முருட்டலானார் — அங்கே
சகுனி வென்று விட்டான்''

எளிய பதங்களில், எளிய நடையில், 'பொதுமக்கள் விரும்பும் மெட்டில்' பாடிய பாரதியார் உபநிட சாரத்தையும் காயத்ரி மந்திரத்தையும் தமிழில் தந்திருக்கிறாரே!

''செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத்
தேர்கின்றோம் — அவன்
எங்களறிவினைத் தூண்டி நடத்துக.''

''இருளை நீக்கி ஒளியினைக் காட்டுவாய்
இறப்பை நீக்கி அமிர்தத்தை ஊட்டுவாய்''

'அச்சம்' பற்றிய கட்டுரை ரசிக்கக் கூடியது. பாப்பாப் பாட்டிலிருந்து புதுமைப் பெண் உள்பட — விநாயகர் துதி வரை எல்லாவற்றிலும் அச்சத்தை ஒழிக்கும்படி பாரதி வலியுறுத்தியதை ரசமாக ஆசிரியர் காட்டியுள்ளார்:

பாரதி நீவளர்த்துத் தெய்வத்தை விளிக்கிறான்.

''அச்சத்தைச் சுட்டங்கு சாம்பரு மின்றி
அழித்திடும் வானவனை....''

வடமொழி இலக்கியம், ராமகிருஷ்ணர் குட்டிக்கதை, இக்பால் கவிதை போன்ற பலவற்றை ஒப்பிட்டு ஆராய்ந்திருக்கிறார் ஆசிரியர். 'பாரதி வளர்த்தது பார்ப்பனீயமா?' போன்ற விவாதத்துக்கு இடமளிக்கும் கட்டங்களும் உண்டு. —வாதூலன்

'மகாகவி பாரதியார் கவிதையும் வாழ்க்கையும்'. தி. சா. ராஜு, வானதி பதிப்பகம், சென்னை-17. விலை ரூ. 7—50.

நமது பார்வைக்குக் கிடைத்த இதர மார்ச் மாத வெளியீடுகள்:

ஒன்றே குலம் ஒருவனே தேவன் (சித்தாந்த விளக்கம்) இ. பழனியப்பன், விவேகாநந்தா அச்சகம், 48, மேல மாசி வீதி, மதுரை-1. விலை ரூ. 5.

மருத்துவ திறவுகோல். தொகுத்தவர்: டாக்டர் எஸ். சிதம்பர தாணுப் பிள்ளை, சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், அண்ணாநகர் (கிழக்கு) சென்னை-102. விலை ரூ. 10.

அரையன் விஜயாலயத் தேவன் (காவிய நாடகம்) மா. சங்கரன், ஸ்ரீவித்யா பதிப்பகம், 78, அளகேசன் சாலை, கோவை-11 விலை: குறிப்பிடவில்லை.

எதிலும் முதன்மை பெறுவது எப்படி? விதி என்ன செய்யும்? பி. சி. கணேசன், வானதி பதிப்பகம், சென்னை-17 விலை: ரூ. 3-75; 4-00.

நிலவு தந்த கவிதைகள் எஸ்.கே.எஸ். எஸ்.கே.எஸ்.பப்ளிகேஷன்ஸ் 1,62வது தெரு அசோக் நகர், சென்னை-83 விலை: ரூ. 7.

சௌந்தரிய சொப்பனங்கள். இ. வீரபாண்டியன், வீணை வெளியீடு, பொன்னையன் தெரு, திருத்துறைப்பூண்டி 614713. விலை ரூ. 6.

'இராமனைத் தரிசிப்போம்' பலரது கட்டுரைகள் தொகுப்பு. கம்பன் கழகம், ராஜபாளையம். விலை ரூ. 3.00.

# சாதாரண மனிதன்

## 15



'லக்ஷ்மி'

அந்த ஞாயிற்றுக்கிழமை பல தடவைகள் உள்ளேயிருந்து வாயில் பக்கம் வந்து எட்டிப் பார்த்து அவள் ஏமாந்து போனாள். ஸ்ரீதரன் அன்று அவள் வீட்டுப் பக்கமே வரவில்லை.

அடுத்த நாள் பள்ளிக்கூட வேலை முடிந்ததும் பஸ் நிலையத்திற்கு விரைந்தவளின் கண்கள் அந்தப் பாலி க்ளினிக்கின் வாயிலைத் துழாவின. கார்கள் நிறுத்தப்பட்டிருந்த இடத்தில் அவனுடைய மோட்டார் சைக்கிளைக் காணவில்லை.

அடுத்த நாளும் காணவில்லை. தொடர்ந்து அந்த வாரம் முழுவதும் காணவில்லை.

அப்படி என்றால் அவர் ஊரில் இல்லையா? எங்கு போயிருப்பார்?

சனிக் கிழமை காலை தோட்ட வேலைக்கு வந்த மாரப்பன்தான் விஷயத்தைச் சொன்னான்.

''ஒரு வார காலமா நம்ப கடைத் தெரு க்ளினிக் மூடிக் கிடக்கு — பிறகு விசாரித்ததிலே தெரிஞ்சது — டாக்டர் ஏதோ அவசரமா பம்பாய்க்குப் போயிருக்காராம்....''

மறுபடியும் அவள் மனத்தில் பலவித சந்தேகமும் குழப்பமும் ஏற்பட உலகமே சூனியமாகிவிட்டது போன்ற உணர்வில் தவித்துப் போனாள்.

அத்தைக்கு உதவியாகச் சமையலறையில் பாத்திரங்களைத் துடைத்து ஷெல்பில் அடுக்கிக் கொண்டிருந்த போது அவளால் மௌனமாக இருக்க முடியவில்லை.

'டாக்டர் ஸ்ரீதரன் பம்பாய்க்குப் போயிருக்காராம். அது எதுக்காக இருக்கும்?'—தனக்குள் மெல்ல முணுமுணுத்துக் கொண்டாள்.

அம்மியில் துவையல் அரைத்துக் கொண்டிருந்த ஜெகதா லேசாகச் சிரித்துவிட்டாள்.

இந்தப் பெண்ணுக்குச் சதா இவனைப் பற்றிய ஜபந்தானா!

''உன் அவசர புத்தி உன்னை விட்டு அவ்வளவு சீக்கிரம் போயிடுமா? ஸ்ரீதரன் அக்கா பம்பாயில் இருக்காங்க — அவங்களை ஒரு முக்கிய காரியமாகப் பார்க்கப் போயிருக்கலாம் இல்லையா?''

"ஊருக்குப் போறதைப் பத்தி ஒரு வார்த்தைகூட நம்ம கிட்ட சொல்லலே யேன்னுதான் யோசித்தேன்." — பதிலளித்த படி பாத்திரங்களை அடுக்கிக் கொண்டிருந் தாள் சந்தியா.

"நாமென்ன அவருக்கு அத்தனை ஒரு நெருக்கமான சொந்தமா... சொல்லிக் கொண்டு போகணும்னு... எனக்கு உன் மன நிலை புரிகிறது. அத்தான் குமரேசன் விதைச் சுட்டுப் போன சந்தேகம் நல்லாவே வெறி பிடிச்சுட்டு உன் மனசை விட்டு நகர மாட்டேங்குது. ஸ்ரீதரன் ஏதோ ஒரு முக்கியமான சங்கதிக்காகத்தான்



பம்பாய் போயிருக்கணும். பார்த்துக்கிட்டே இரு. திரும்பி வரப்போ ஒரு நல்ல சேதி யோட வருவான். என் மனம் அப்படிச் சொல்லுது.''

சந்தியா சிரிக்க முயன்றாள். ஆனாலும் ஒரு வார காலமாக அவனைப் பார்க்காத தினால் ஏற்பட்ட ஏக்கம்... எதிலும் நாட்ட மில்லாத ஒரு விரக்தி மனத்தை வாட்டு வதை உணர்ந்தாள்.

அன்று இரவு திடீரென்று மழை கொட்டத் தொடங்கியது. வானத்தில் மேகம் கவிழ்ந்துகொண்டு மின்னலும் இடியுமாகப் பலத்த மழை பொழிந்தது.

சாரலைத் தவிர்க்க தாழ்வாரங்களின் மேலே சுருட்டிக் கட்டியிருந்த மூங்கில் பாய்களை அத்தை அவசரமாக அவிழ்த்து விட்டாள்.

''அம்மாடி! இப்படி மழை கொட்டறதைப் பார்த்து எத்தனை நாளாச்சு! நாளைக்கு நீ தோட்டத்தைப் பார்த்தா ஆச்சரியப் பட்டுப் போவே. ஒரே மழையில் பச்சுன்னு இருக்கும் சந்தியா.. மழைக்காலம் ஆரம்பமாகிவிட்டதுங்கறதுக்கு இந்த மழை அறிகுறி. நாளையிலிருந்து நீ மறக்காமக் குடையைக் கையோட எடுத்துக்கிட்டுப் போகணும். — ஞாபகமிருக்கா போன வருஷம் உங்கப்பா போன கையோட நீ வேலைக்குப் போய்வரும்போது ஒரு நாள் நல்ல மழையிலே நனைஞ்சு போய் வந்து வீட்டிலே படுத்தவ காய்ச்சலும் இருமலுமா பத்து நாள் எழுந்திருக்கவில்லை. அந்தச் செந்தில் இட்ட நான் பட்ட பாடு....''

''இப்பத்தான் உங்க மனசுக்குப் பிடிச்ச ஒரு நல்ல டாக்டர் கிடைச்சிருக்காரே'' வேடிக்கையாகக் கூறிக்கொண்டு மழைத் துளி பட்டு ஈரமாகிவிட்ட கூடத்தைத் துணியால் துடைக்கத் தொடங்கினாள்.

இரவு முழுவதும் பெய்த மழை காலையில் ஓய்வெடுத்துக் கொண்டது. வழக்கம்போல் கள்ளென்று சூரியன் புறப்பட்டுவிட்டது. இரவு பெய்த மழையில் தெருப் புழுதி அடங்கிச் சுத்தமாகக் காணப்பட்டது.

மறக்காமல் அவள் வேலைக்குக் கையில் குடையுடன்தான் புறப்பட்டாள்.

அத்தை ஜகதாவின் வானிலை அறிக்கை பொய்யாகவில்லை. பகல் மூன்று மணி அளவிலேயே திடீரென்று வானம் இருட்டிக் கொண்டு மின்னலும் இடியுமாகக் குமுறத் தொடங்கி விட்டது. பள்ளிப் பிள்ளைகளின் நலனை உத்தேசித்துத் தலைவி மழை பலக்கு முன் அவர்களை வீட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்துவிட்டாள். ஆசிரியர்கள் தங்கள் பொறுப்புக்களை முடித்துக் கொண்டு கிளம்புவதற்குள் லேசாக ஆரம்பித்த தூறல் பலக்கத் தொடங்கியது.

மழை சிறிதளவு நிற்கக் காத்திருந்துவிட்டு அவள் குடையைப் பிரித்துக்கொண்டு வேகமாகத் தெருவில் நடக்க முயன்றபோது பலமாக வீசிய காற்றில் குடை இங்குமங்கும் இழுக்கப்பட்டுக் கம்பிகள் இரண்டு பிய்த்துக்கொண்டு படக்கென்று விரிந்த குடை மூடிக்கொண்டது.

ஒரே விநாடிதான் — அதற்குள் அவள் அத்தை எச்சரித்தபடியே தெப்பலாக நனைந்து போனாள்.

தலைமேல் விழுந்து விடும்போல் கடகடவென்ற இடியோசையில் அரண்டுபோய்ச் சாலையில் ஓடிய நீரில் தட்டுத் தடுமாறிக் கொண்டு பஸ் நிலையத்தை அவள் அடையுமுன் பஸ் நகர்ந்து விட்டது.

அடுத்தது வருவதற்குள் நன்றாக இருட்டி விடும். மழையும் நிற்காது போலத் தோன்றுகிறதே? மிரட்சியுடன் அவள் சாலையை எட்டிப் பார்த்தபோது பச்சை வண்ண அம்பாஸிடர் வண்டியொன்று அவள் அருகே வந்து நின்றது. ''ஏறிக்கோங்க. நீங்க மழையிலே நனைஞ்சுக்கிட்டு வரதை கிளினிக்கு முதல் மாடி ஜன்னல் வழியாகப் பார்த்தேன். நானும் கிளம்பற நேரம்தான். அதனாலே வேகமாக வந்து காரைக் கிளப்பினேன்.'' என்றபடி கிரிதரன் அவள் ஏறிக்கொள்ள முன் ஆசனக் கதவைத் திறந்து விட்டான்.

சற்றுத் தயங்கி ஏறிக்கொண்டாள்.

''இருட்டு வேளை — மழை — இவனை நம்பிக் காரில் ஏறலாமா என்றுதானே தயக்கம்?''— சிரித்துக் கொண்டே கதவைச் சாத்திவிட்டுக் காரைக் கிளப்பினான் கிரிதரன்.

''எந்த நிலையிலும் நான் என்னைக் காத்துக் கொள்ள முடியும் என்கிற தைரியம் எனக்குண்டு. இதுதான் ஒரு புது அனுபவம். அதான் ஒரு கணம் தயங்கினேன்...''

காரைத் திருப்பிச் சாலையில் கிராமத்தை நோக்கி ஓட்டினான் அவன்.

''எனக்கும் இது ஒரு புது அனுபவம். என் தொழில் ரீதியில் நான் பெண்நோயாளி, நர்ஸ், வைத்தியர்களிடம் சகஜமாகப் பேசுவதுண்டு. ஆனால் இப்படி காரில் என் அருகில் ஏற்றி உட்கார வைத்துக் கொள்ளும் அளவு நான் யாருடனும் நெருங்கிப் பழகியதில்லை.... சிரித்தான் அவன்.''

சந்தியாவின் நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. அவள் கேட்க இருந்த அந்தச் சந்தேகத்தை முன்கூட்டியே எதிர் பார்த்துவிட்டவன் போல் விளக்கம் தந்து விட்டானே?... அவளுக்கு வியப்பு.

''இது யார் கார்? இத்தனை நாட்கள் எங்கே போயிருந்தீங்கன்னு கேட்பீங்கன்னு நினைச்சேன்.... ஆசைப்பட்டேன்.''

இண்டர்வியூ நடத்துபவர்: உன்னுடை டைப் ரைட்டிங் ஸ்பீட் என்ன?

மாணவன்: நிமிஷத்துக்கு பதினேஞ்சு தப்பு....!

-சுந்தரம்



''எங்க அத்தான் குமரேசன் நினைச்சபோது ஒரு காரில் ஏறி வருவார். அது அவர் காராகவே இருக்காது...''

''இல்லை...இல்லை... இது என் சொந்தக் கார்... என் டாக்டர் நண்பன் இதை விற்கப் போகிறான்னு கேள்விப்பட்டுப் பட்டணத்துக்கு எழுதிக் கேட்டேன். பழைய கார் தான்... கொஞ்சம் பழுதாக்கூட இருந்தது. இப்ப சத்தியா இதுக்கு மேலே நமக்குக் கட்டாதுன்னு இதை வாங்கப் பட்டணம் போயிருந்தேன். அப்படியே பம்பாய் போக வேண்டியிருந்தது.''

''மோட்டார் சைக்கிள் வச்சக்கிட்டிருந்திங்களே?''

''அதை முதலில் பூதலூரில் ஒருத்தருக்கு விற்றுவிட்டேன். அந்தப் பணத்தைப் போட்டு பம்பாய்க்குப் போய் அக்கா புருஷனிடம் கடன் தொகை வாங்கிச் சேர்த்து இந்தக் காரை வாங்கினேன். வட்டியோட சிறிது சிறிதாகக் கடனை அடைக்கணும். — அதுக்காக நான் ரொம்ப வேலை செய்யணும். மழைக் காலத்தில் பக்கத்துக் கிராமங்களுக்கு மோட்டார் சைக்கிளில் கேஸ் பார்க்கப் போவது சிரமமாச்சே... ஒரு டாக்டருக்குக் கார் என்பது ஒரு முக்கியமான தேவை.''

''என்னைப் போன்றவர்களுக்கு கார் ஒரு போகப் பொருள் இல்லையா?'' சிரித்தாள் சந்தியா. ''எங்கத்தான் வித விதமான ஓசிக் கார்களை எடுத்துக்கிட்டுப் பார்க்க வருவார். ஒரு நாளும் நான் அந்தக் காரில் ஏறி அவரோடு எங்கேயும் சிறிது தூரம் போய் வந்ததில்லை.... மழை கொட்டியதால் தவிர்க்க முடியாது உங்களோடு இன்று....'' மேலே அவள் பேசாது மவுனமானாள்.

ஏதோ பதில் சொல்ல நினைக்கு முன் கார் தெருவைத் தாண்டி அகலமாகத் திறந்து வைத்திருந்த கேட்டுக்குள் புகுந்து தோட்டத்தின் முன் பகுதியில் வராந்தாவுக்கு முன் நின்றது. கவலைப்பட்டுக்கொண்டு வாசற்படி அருகில் நின்ற அத்தை அவர்களைக் கண்டு முகம் மலர்ந்து போனாள்.

''வாப்பா தம்பி! கார் ஏது?...'' என்று பல கேள்விகளுடன் ஸ்ரீதரனை மகிழ்ச்சியுடன் வரவேற்றாள்.

மணமகன்: எங்களை ஆசிர்வதியுங்கோ மாமா!
மாமா: பதினாறும் பெற்று, பஞ்சாயத்துத் தேர்தல் வரும்வரை வாழணும். -சம்பத்



சந்தியா சுருக்கமாக விவரத்தைத் தெரிவித்துவிட்டுக் குளியலறைக்குள் விரைந்தாள். சிறிது பொழுதில் அவள் மாற்றுடையுடன் வெளிப்பட்டபொழுது கூடத்தில் ஸாம்சனுடன் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தான் ஸ்ரீதரன். அத்தை மேஜைமீது எல்லோருக்கும் சாப்பிட இலைகளை விரித்துக் கொண்டிருந்தாள்.

''இருட்டிப் போச்சு — நாமும் இப்பச் சாப்பிடப் போறோம். அதனால் நம்மோட ஒரு வாய் இருந்து சாப்பிட்டுவிட்டுப் போகச் சொன்னேன்....'' சந்தியாவிடம் உத்தரவு கேட்கும் பாவனையில் அத்தை சொன்னாள்.

''மெனு வெங்காய சாம்பார், உருளைக் கிழங்கு வறுவல்னுங்க... நான் அவங்க அழைக்கு முன் ஒரே பிடியா உட்கார்ந்துட்டேன்.'' சிரித்தான் அவன். ஒரு வார காலத்துக்குப் பின் சந்தியா தாபத்தின் பிடியிலிருந்து மீண்டவளாக மகிழ்ச்சியுடன் அவனுடன் கலந்து சிரித்தாள். அவனுடன் கூட அமர்ந்து சிரித்துக் கொண்டு சாப்பிடும் அனுபவம் எத்தனை புதுமையாக, இனிமையாக இருக்கிறது! இந்த அனுபவம் காலம் முழுவதும் நீடிக்கும்படி ஒரு பாக்கியம் கிட்டாதா? — லேசாகப் பெருமூச்செறிந்தபடி கனிவுடன் தன்னை அடிக்கடி நிமிர்ந்து பார்க்கும் அவனது பார்வையில் உருகிக் கொண்டிருந்தாள்.

அவன் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பும்போதும் இடி, மழை விடவில்லை. காற்றும் பலம்.

வராந்தாவரை வந்து வழி அனுப்பிய சந்தியாவின் மனம் சஞ்சலப்பட்டது.

''கவலைப்படாதீங்க. இன்னிக்கு ராத்திரி கடைத் தெருவில் உள்ள என் கிளினிக்கில் தூங்கிவிட்டு... காலை கிளினிக்கை முடிச்சுக்கிட்டுப் பிறகு ஒன்பது மணிக்கு மேலே பூதலூர் கிளம்பறதா உத்தேசம்'' என்றான்.

''அப்போ ஒண்ணு செய்வீங்களா? காலை காப்பி பலகாரத்துக்கு இங்கே வந்திருங்க.''

''ஒரு நிபந்தனை — கிளினிக்கை முடிச்சுட்டு நான் வரும்வரை நீங்க பள்ளிக்குக் கிளம்பக் கூடாது. காப்பி பலகாரத்தை முடிச்சுட்டு என் காரில் உங்களை நானேகூட்டிக்கொண்டு பள்ளிக்கூட நேரத்துக்குப் பத்து நிமிஷம் முந்தியே கொண்டு விடுவேன்.''

பின்னால் வந்து நின்ற அத்தை பதில் சொன்னாள் — ''அதுக்கென்ன தம்பி, அப்படியே செய்தால் போச்சு!''

அன்று இரவு முழுவதும் காற்றும் மழையும் ஓயவில்லை. அன்றைய அனுபவத்தின் இனிமையில் — பல எதிர்பார்ப்புக்களின் நினைவில் சந்தியா வெகு நேரம் உறங்கவில்லை. விடியும் தருவாயில்தான் தன்னை மீறிய அலுப்பில் உறங்கிப் போய்விட்டாள்.

அதென்ன பலத்த இடியா? பெண்கள் இருவரும் திடுக்கிட்டு எழுந்து வந்து பார்த்தனர். தாழ்வாரத்தில் சுருண்டு கிடந்த ஸாம்சன் பலமாகக் குரைத்தது. பின் பக்கத்திலேயிருந்து செல்லக்குட்டியும் கன்றும் 'அம்மா' என்று அலறி அழைக்கும் சத்தம் கேட்டது.

(தொடரும்)

நினைவெல்லாம் நித்யா 15

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:



























அப்போது சட்டென விளக்கு அணைய—



முடிவு அடுத்த இதழில்

# எங்கம்மாவுக்கு இன்னொரு பாப்பா பொறக்கப் போறதாமே

# அப்பறமா அம்மா என்னை கவனிக்க மாட்டாங்களோ?



## இந்த நிலை தேவையா?

விவேகமுள்ள பெற்றோர் ஒரு குழந்தைக்கும் அடுத்ததுக்கும் இடைவேளை ஏற்படுத்திக் கொண்டு, குடும்பத்தையும் திட்டமிட்டுக் கொள்ளுகின்றனர்—நிரோத் உபயோகிப்பதன் மூலம்

davp 81 235




நிரோத்—உயர்தர ரப்பர் கருத்தடைச் சாதனம்,
நம்பகமானது, சௌகரியமானது, ஒவ்வொன்றும் மின்னணுச்
சாதனத்தினால் பரிசோதிக்கப்பட்டது.
அரசு ஆதரவு காரணமாக மிக மலிவானது.

## நிரோத் உபயோகியுங்கள் உயர் ரக கருத்தடைச் சாதனம்

விநியோகஸ்தர்கள்: ப்ரூக் பாண்ட், லிப்டன், ஹிந்துஸ்தான் லீவர், யூனியன் கார்பைட், ஜுபிலல், ஸிமித் ஸ்டேனிஸ்டிரீட், இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன், பாரத் பெட்ரோலியம், ஹிந்துஸ்தான் பெட்ரோலியம், அரசன் மேட்ச் இண்டஸ்ட்ரி.



சொற்பொழிவு நிகழ்த்தும் சௌந்திரா கைலாசம், பின்னால் சென்னை பல்கலைக்கழகத் துணைவேந்தர் சாந்தப்பா

# பல்கலைக் கழகத்தில் பாரதி

சென்னைப் பல்கலைக் கழகத்தில் இவ்வாண்டு கல்கி நினைவுச் சொற்பொழிவுகளை ஏப்ரல், 5, 6, 7 தேதிகளில் நிகழ்த்தியவர் ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம். கடந்த இருபதாண்டுகளில் இந்தச் சொற்பொழிவுகளை வழங்கும் முதல் பெண்மணி இவர்தான் என்று சொற்பொழிவைத் தொடங்குமுன்னரே பலத்த கைத்தட்டலைப் பெற்றுக்கொண்டார்.

'பாரதியும் நாடும்' என்ற தலைப்பில் தாம் ஆற்றவிருந்த முதல் நாள் சொற்பொழிவைத் துவங்குவதற்கு முன்னால், மகாகவிக்குத் தமது கவிதையொன்றினால் அஞ்சலி செய்தார் சௌந்தரா. கவிதையைத் தம் இனிய குரலில் வழங்கியவர் மகா கவியின் கொள்ளுப் பேரர் ராஜ்குமார் பாரதி. (நினைவுச் சொற்பொழிவுகள் வரிசையில் பேச்சை ஆரம்பிக்கு முன் இசையோடு பாடலை வழங்குவதும் இதுதான் முதல் தடவை.)

''தம் வாழ்க்கை முழுவதையும் மக்களுக்காகவே, மக்கள் நன்மைக்காகவே வாழ்ந்தவர் பாரதி. பாரத மாதா வேறு, பராசக்தி வேறு அல்ல அவருக்கு. தேசமே கோயிலாய், பாரத தேவியே பராசக்தியாய் நினைத்தவர். பாரத மணிக்கொடி பாரத மாதாவின் தாலிக் கொடி; வீர சுதந்திரம் தான் தேவியின் புருஷர்....''

இரண்டாம் நாள் தலைப்பு: பாரதியும் சமூகமும்.

''பிற கவிஞர்கள் நிறைய முன்னேயே இருந்தபோது, பாரதியை மட்டும் ஏன் போற்றுகிறோம்! மக்கள் தம்மைப் பெரிதாக மதிக்க வேண்டும் என்று பிற கவிஞர்கள் நினைத்தபோது இவரோ மக்களையே பெரிதாக மதித்தார். கள்ளக் குரலில் பாடாமல் உள்ளக் குரலில் பாடிய கவி..., தேவையான கருத்துக்களைத் தெளிந்த நடையிலே எழுதியவர். 1906ல் 'இந்தியா' பத்திரிகையைத் துவக்கினார். (சிவப்புத் தாளில் அச்சாகும் இது!) உள்ளதை உள்ளபடியே அஞ்சாமல் எழுதினார். 'இன்னும் நம்மால் நாட்டுக்கு அதிகம் செய்ய முடியவில்லையே என்ற தாபம் பாரதிக்கு. நாட்டுக்கும் சமுதாயத்துக்கும் தேவையான தொழில் எதுவானாலும் செய்யலாம். சோம்பல் ஒன்றுதான் தாழ்வானது என்றுகருதி யவர் பாரதி.''

சௌந்தரா கைலாசம் மிக ரசித்துச் சிரித்துச் சொன்ன ஒரு குட்டி நிகழ்ச்சி:

தர்மராஜா கோயிலில் நடைபெறும் கதாகாலட்சேபத்தின்போது, அவையினர் சத்தம் போட்டுப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்த உபந்நியாசகர், அடிக்கடி 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்' என்று சொல்ல, அவையோரும் பேச்சை நிறுத்தி 'கோவிந்தா, கோவிந்தா!' என்று முடிப்பார்களாம். பார்த்தார் குறும்புக்காரப் பாரதி. கோவிந்தன் என்றொரு பையனைக் கூப்பிட்டு, 'அவர்கள் கோவிந்தா, கோவிந்தா என்று கூவும்போது உள்ளே நுழை. 'என்னை ஏன் அழைத்தீர்கள்? என்று கேள்' என உள்ளே அனுப்பி விட்டாராம்!

மூன்றும் நாள்—'பாரதியும் தெய்வமும்':

''இந்தியாவுக்கு அரசியல் விடுதலை மட்டுமல்ல, ஆத்ம விடுதலையும் கூட முக்கியம். உணவைப் போலவே தியானமும் முக்கியம். நாத்திகரா யிருந்தாலும் தியானம் செய்யலாம் என்றார் பாரதி. பாப்பாப் பாட்டு மூலம் தெய்வ பக்தியை வெளிப்படுத்திய கவிஞர். அவருக்கு வேதத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை. அல்லாவைப் பற்றியும் ஏசுவைப் பற்றியும் உண்மையான உள்ளுணர்வோடு பாடிய மகா கவி. கண்ட வஸ்துக்களுக்குள்ளே அகண்ட வஸ்துவைக் காண நாம் பயிற்சி பெற வேண்டும் என்று வாழ்ந்தவர். தேசத்தை நாம் வாழ வைக்க வேண்டும்; தெய்வம் நம்மை வாழ வைக்கும் என்று உறுதியாக நம்பியவர் பாரதி.''

டாக்டர் ந. சஞ்சீவி தெரிவித்த செய்தி:

இந்த மூன்று நாள் சொற்பொழிவுகளையும் பல்கலைக் கழகமே புத்தக வடிவில் வெளியிடப் போகிறதாம்!

- சாருகேசி, புகைப்படம்: உத்ரா

2

"பிரெஞ்சு எழுத்தாளன் பால்ஸாக் ஒரு முறை எழுதினான்: பிஹைண்ட் எவ்ரி பிக் ஃபார்ச்சூன் தேர் இஸ் எ க்ரைம்!"

"அப்படின்னா என்ன ராஜாமணி?"

"டேய் ராவ்! இது உனக்குப் புரியல்லியாடா? நேர்மையான முறையிலே சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு வாழ்க்கை நடத்தறவன் எவனுமே என்னிக்கும் பெரிய பணக்காரனு ஆக முடியாது. பெருஞ் செல்வமும், சீரும் ஒருத்தன் கிட்ட இருக்குதுன்னு சொன்னுல் அதுக்குப் பின்னுடி ஒரு பாவ காரியம் மறைஞ்சு இருக்குன்னு சொல்றுன் பால்ஸாக்."

"நோ! இதை என்னுல் ஒப்புக்க முடியாது. வாழ்க்கையிலே பாடுபட்டு, முயற்சியால எத்தனை பேர் முன்னுக்கு வரல்லே? அவனுக எல்லாருமே பாவ காரியம் செஞ்சிருக்கான்னு அர்த்தமா?" என்று ராவ் இடை மறித்தான்.

"போடா மண்டு! பிக் ஃபார்ச்சூன்... பெருஞ் செல்வம்னு சொல்றுண்டா. கோடீஸ்வரனு ஆகணும்னு ஏதாவது ஒரு பாவ காரியம் செஞ்சிதான் இருக்கணும்."

"வந்து...." ராவ் ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

அவர்கள் அறையின் பக்கம் நிழலாடியது.

"யாரது?"

"நான்தாண்டா!" சொல்லிக்கொண்டே முரளிதரன் மிதியடிகளைக் கழற்றிவிட்டு உள்ளே நுழைந்தான்.

"வாடா! வழி தெரிஞ்சுதா? ஒரு வாரமா ஆளையே காணுமே! எங்கேடா போனே?"

"எனக்கு ஒரு ப்ர.ப்ளம்!" முரளி பீடிகை போட்டான்.

"வெரி குட்! கொய்ட் இன்டரஸ்டிங்! லெட் தி கேட் அவுட் ஆஃப் தி பேக்!"

"கேலி பண்ணக் கூடாது!"

"நோ! நீ எப்போ ப்ராப்ளம்னு சொல்லிண்டு என்கிட்டே வந்திருக்கியோ, நான் உன்னை எப்படிக் கேலி செய்ய முடியும்? என்னுல உனக்கு உதவி செய்ய முடியுமான்னு பார்ப்பேனே தவிர... கிவ் இட்! விஷயத்தைச் சொல்லு!"

முரளி தரையில் விரித்திருந்த ஜமுக்காளத்தின் மீது உட்கார்ந்து காலை நீட்டிக் கொண்டான்.

"எனக்கு நான் இப்பப் பார்க்கிற வேலை கொஞ்சம் கூடப் பிடிக்கல்லே. தினம் பொழுது விடிஞ்சா ஆபீஸ் போகணுமேன்னு இருக்கு. வேலையை விட்டுடலாம்னு பார்க்கிறேன். ரொடீன் ஜாப். மொனுடனஸ்ஸா இருக்கு. அலுத்துப் போச்சு! சில நேரங்களிலே ஏன்தான் வாழறமோன்னு இருக்கு. தினமும் பல்லவன் டிரான்ஸ்போர்ட்டிலே இடிபட்டு நசுங்கி, வியர்வையிலே குளிச்சு, மனித இனத்தோட வியர்வையைப் பூசிண்டு வேலைக்குப் போக வேண்டியிருக்கு. வெறுத்துப் போச்சுடா!"

ராஜாமணி பலமாகச் சிரித்தான்.

"டேய் ராவ்! கேட்டியாடா முரளி சொல்றதை. ப்ராப்ளம்னு சொன்னவுடனே நான் ஏதோ எதுவோன்னு என் புத்தியைத் தீட்டிண்டு யோசனை சொல்லத் தயாரானேன். இந்த முட்டாள் என்னடான்னு ரொம்ப சாதாரணமான விஷயத்தைப் பெரிசுபடுத்தறுன்!"

முரளியின் முகம் சற்றே சிவந்தது.

"என்னடாது கேலி பேசறே! ஐ ஹேவ் நோ பீஸ் ஆஃப் மைண்ட்!"

"கோ டு ஹெல் வித் இட்! நாளைக்கே எல்லாத்தையும் தூக்கி எறிஞ்சிட்டு இமாலயத்துக்குப் போடா! கோவணம் கட்டிண்டு, நந்தாவிலே குளிச்சிண்டு, ப்ராணுயாமம் பண்ணிண்டு, ஈஸ்வர தியானம் பண்ணு. பீகம் அன் அஸடிக். வேண்டுதல் வேண்டாமை இல்லாத ஒரு பூரண நிலைக்குப் போ! உன் ஆத்மாவுக்கு, உன் சிந்தனைக்கு, உன் எண்ணங்களுக்கு விடிவு ஏற்படும். கெட் அவுட் ஆஃப் திஸ் ப்ளேஸ்!"

"ராஜாமணி!"

"யெஸ்! நிஜமாத்தான் சொல்றேன். பாரதி சொன்னுப்பல உனக்கு மன அமைதி தான் வேண்டும்னு சொன்னு ஈஸ்வர தியானம் பண்ணு! லௌகீக வாழ்க்கையிலே அதுக்கு இடமில்லே. பொருள் சம்பாதிக்கணும், அழகான பொண்ணைக் காதலிக்கணும், ரிஸர்வ் பண்ணி சினிமா பார்க்கணும், கேர்ள் பிரெண்டோட டிரைவ் இன்லே ஹாய்யா டிபன் சாப்பிடணும்னு சொன்னு மன அமைதியைப் பத்திப் பேசாதே. இந்த நாட்டிலே சராசரி மனுஷன் ஒவ்வொருத்தனும் படற அவஸ்தைகள்தான் நீ சொன்ன



# கவர்ச்சிகள்

## கிருஷ்ணமணி

தெல்லாம். இதைப் போய் ப்ராப்ளம்னு சொன்னு... நோ... இட் இஸ் எ ப்ளடி ஜோக்!'' ராஜாமணி மீண்டும் சிரித்தான்.

முரளிதரனால் அவனுடைய சிரிப்பை ரசிக்க முடியவில்லை. இந்த ராஜாமணி எப்போதும் இப்படித்தான். அகட விகடமாகப் பேசுவான். எதிராளியைச் சற்றும் மதிக்க மாட்டான். தூக்கி எறிந்து பேசுவான். அவனுடன் வாதம் புரிவது மிகக் கடினம். கொச்சையான வார்த்தைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் சரமாரியாக உதிர்ப்பான். அவனுடைய பேசும் திறமையும், கம்பீரத்தொனியும் அநாயாசமான ஒரு பார்வையுமே எதிராளியை நிலைகுலையச் செய்துவிடும். இருந்தாலும் தன்னால் ராஜாமணியின் நட்பை உதற முடியாதிருப்பது அவனுக்கே வேடிக்கையாக இருந்தது.

ராவ் மீண்டும் பேச முற்பட்டான். ''ராஜாமணி! நீ முரளியை ஒரேயடியாய்த் தூக்கிக் கீழே போட்டுட்டே! அவன் அசந்து போயிட்டான். சீரியஸ்ஸா ஏதோ நடந்திருக்கணும். அதுக்கு ஒரு முன்னுரையா அவன் ஏதோ சொல்ல ஆரம்பிச்சிருக்கான். அதுக்குள்ளே நீ வழக்கம் போல் தடலடியாப் பேசி ஆளை அசத்திட்டே. விஷயம் என்னன்னு கேளுடா!''

''ஈஸி!....'' ராஜாமணியின் புருவங்கள் சுருங்கின. தன் பக்கத்திலிருந்த சிகரெட் பெட்டியை எடுத்து ஒன்றை உருவி எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் சிகரெட் புகை அங்கே சூழ்ந்துகொண்டது.

''சொல்லுடா! ஐம் ரியலி ஸாரி! உன் பிரச்னை என்ன?''

ராஜாமணியின் இந்தப் போக்கு அவன் நண்பர்களுக்குத் தெரிந்ததுதான். எவ்வளவுக்கெவ்வளவு அவன் புத்திசாதுரியத்துடன் இருந்தானோ, அவ்வளவுக்கவ்வளவு திடீரென்று பல சமயங்களில் ஒரு சிறுவனைப் போல மிகுந்த ஆவலுடன் மற்றவர்கள் சொல்வதைக் கேட்கத் தயாராகி விடுவான். தன் தவறுகளை உணரும் விநாடியே எதிராளியின் மன்னிப்பைக் கோருவான். இந்த நேர்மையான பண்புதான் அவனுடைய நண்பர்களை அவன் பிடியினின்றும் மீற முடியாமல் கட்டிக் காத்தது.

முரளி நிதானமாகப் பேசினான்: ''யூ நோ! எங்க ஆபீஸ் வேலையை நேத்து வரைக்கும் நான் ராஜிநாமாச் செய்யத் துடிச்சிண்டிருந்தேன். ஆனா இந்த இரண்டு நாளிலே என் லைஃப்லே பெரிய மாறுதல் ஏற்பட்டு இருக்கு!''

''ம்.....''



சிகரெட் புகை மீண்டும் சூழ்ந்தது.

''எங்க கம்பெனியிலே ஹிரண்மயின்னுஒரு பெங்காலிப் பொண்ணு இருக்கா. திடீர்னு எனக்கு.... அதை எப்படிச் சொல்றதுன்னே தெரியல்ல. எப்பவும் என் மனசிலே அவ ளைப் பத்தின நெனைப்புத்தான். நான் அதுக் கானகாரணத்தை யோசித்துப் பார்க்கிறேன். ஒண்ணும் புரியல்லே.''

''ஸோ! யூ ஆர் இன் லவ்! வெரிகுட்! கடவுள்காப்பாற்றட்டும்.பெஸ்ட் ஆஃப் லக்''

இப்பொழுது ராஜாமணியுடன் ராவும் சேர்ந்து கொண்டு சிரித்தான்.

''சிரிக்காதே! நான் அவஸ்தைப் பட்டுண்டு இருக்கேன்!''

''அப்படின்னு அவளை லவ் பண்றதை விட்டுடு! வேலையை ராஜிநாமாச் செஞ்சிடு. இமாலயத்துக்குப் போ!''

''ஷட் அப் யூ ஃபூல்!'' முரளி கத்தினன்.

''டேய் ராவ்! இவனுக்குச் சரியாப் பிடிச் சிருக்குடா!''

''யெஸ்!''

''ராஜாமணி!''

''சத்தம் போடாதே. இந்த மாதிரிப் பிரச்னைக்கெல்லாம் என்னால பதில் சொல்ல முடியாது.அது உன்னோட தலைவலி. ஹிரண்ய கசிபு தங்கையை நீ....''

''ஹிரண்மயி! தூர்க்கையோட பேருடா!''

''வெரி குட்! எடிமாலஜிஸ்டா ஆயிட் டாண்டா! ஒரு மனுஷன் எப்போ ஒரு பொண்ணைக் காதலிக்கிறானே அப்பவே அவன் ஒரு கவிஞனும் ஆயிடறான். முரளி ஹேஸ் பிகம் எ பொயட்!''

''பார்த்தியா திரும்பவும் நீ குழந்தைத் தனமாப் பேச ஆரம்பிச்சுட்டே!''

''இதிலே குழந்தைத்தனம் என்ன இருக்கு? லவ் பண்ணினு பிராப்ளம் தன்னால வரத் தான் செய்யும். வேலையிலே கவனம் ஓடாது. வேளைக்குச் சோறு பிடிக்காது. படுக்கையிலே எத்தனை தரம் புரண்டாலும் தூக்கம் வராது. மனசுக்கு இனியவளை நாள் பூரா பார்த்துண்டே இருக்கணும் போல இருக்கும். அவளோட வேற எவன் பேசினாலும் எரிச் சல் வரும். அவ முகம் வாடினாப்போல இருந்தா மனசு வாடிடும். அவ சிரிச்சா, சந்தோஷமா இருக்கும்.''

முரளி ஆச்சரியத்துடன் ராஜாமணியைப் பார்த்தான். ''டேய் பழி! எப்படிடா இவ்வளவு துல்லியமா என் மனசை எடை போட்டுப் பேசறே?''

''ஒரு அனுமானம்தான். எப்போ ஒருத்திக்கு உன் மனசிலே இடம் கொடுக்க ஆரம் பிச்சியோ அந்த நிமிஷத்துலேருந்து நீ உன் னைக் கொஞ்சம் கொஞ்சமாய் இழக்க ஆரம் பிக்கிறே. நாளாவட்டத்திலே யூ லூஸ் யுவர் ஐடெண்டிடி! நான் சொல்றது உண்மை யான காதல். பரஸ்பரம் இரண்டு மனித இதயங்கள் நெருங்கி வரும்போது இணைப்பு ஏற்பட்டுப் போறது. அவளுக்கு அவன் தான் எல்லாம் அவனுக்கு அவள்தான் எல்லாம் என்கிற ஒரு நிலைமை உருவாகிறது. அதுக்குப் பிறகு அங்கே தனித்துவம் எங்கே இருக்க முடியும்? தனித்துவத்தைப் பிடிச்சு வச்சிக்கணும்னு நீ முயற்சி செஞ்சா உன் காதல் பலவீனப்பட்டுப் போயிடும். பரஸ் பரம் நம்முடைய நிறை குறைகளை இட்டு நிரப்பற பண்பே காதல்லேதான் உரு வெடுக்கிறது!''

''ராஜாமணி! காதல் வயப்பட்டு இருக் கிற என்னால கூட இப்படி அலசிப் பார்க்க முடியல்லியேடா!''

''எப்படி முடியும்? உனக்கு அதிலே இன் வால்வ்மெண்ட் இருக்கு. நீ அந்த உணர்ச்சி வேகத்திலே சிக்கிண்டு இருக்கே. உன்னை நீ அந்நியப்படுத்திக்க முடியுமான்னு பாரு. இந்த ரஸாநுபவத்திலே இருக்கிற இன்பமே தனிதான். அறிவு வேலை செய்யறதுநின்னு போயிடறது. உணர்ச்சிகளும் மனசும்தான் இங்கே முக்கியமாயிடறது. அறிவு பூர்வமா அலசிப் பார்த்தால் காதல்ங்கிறது ஒரு உணர்ச்சி வேகம்னு சாதாரணமா சொல் விட்டுப் போயிடலாம்!''

''இல்லேடா! வெறும் உணர்ச்சிகளாலே மட்டும் மோதப்பட்டு நான் நிக்கலே. மனசுக்குள்ளே ஏதோ ஒரு விதமான அசைவு ஏற்பட்டுண்டே இருக்கு. நீ சொன்னுப்லே அவளோட பார்வை, சிரிப்பு, அசைவு எல் லாமே என் மனசுக்குள்ளே ஓயாம நிகழ்ந் திண்டே இருக்கு. என்னைப் பிரிச்சுப் பார்க்க முடியல்லே!''

''முக்கியமான கட்டத்துக்கு வர்றேம். காதல் ஏற்படறத்துக்கு இரண்டு நாள்

கூடத் தேவையில்லே. சில நிமிஷங்களுக்குள்ளேயே கூட ஏற்படலாம். அவ உன்னேக் காதலிக்கிருளா?''

''ஷ்யூர்!''

''இதை எப்படி நீ இவ்வளவு நிச்சயமா சொல்றே?''

''வந்து....!'' முரளி சற்றுத் தயங்கிஞன். ''ஒரு அனுமானம்தான்!''

''ஸ்டுபிட்! உனக்கே சந்தேகம் ஏற்பட்டுப் போச்சு! இத பார்டா மக்கு! ஒரு ஆடவனேப் புரிஞ்சுக்கப் பெண்ணுக்கு அதிக நேரம் பிடிக்காது. அவனுடைய பலத்தையும் பலவீனத்தையும் கூட அவ ''சிக்'கெனப் புரிஞ்சுக்குவா. ஏன்ஞ மன்சை ஒருத்தனுக்குக் கொடுக்கிறதுங்கிறது அவளோட வாழ்க்கைப் பிரச்னே. காற்றிலே அடிச்சிண்டு போறமேகக்கூட்டத்தைப் போல நிலேயில்லாத ஒண்ணுக்குப் பெண்கள் ஆசைப் படறதில்லே. அவர்களுக்கு வேண்டியது பாதுகாப்பு. அதைப் பூரணமாகத் தரக்கூடிய தகுதியுள்ளவன்தாஞன்னு தெரிஞ்சுக்கத்தான் அவ அவகாசம் தேடரு. சம்மதம் தர சிக்கிரத்திலே இசைய மாட்டேங்கரு. ஆரு ஆரு.....''

''ப்ளீஸ் புதிர் போடாதேடா!'' ராஜாமணியிடம் முரளி கெஞ்சும் குரலில் கேட்டான்.

''ஆண்களுக்குப் பெண்கள் என்னிக்குமே ஒரு புதிர்தான். அவங்களோட பேச்சு, செய்கை எல்லாமே எதிர் மறையா இருக்கும். அதுகளுக்கு ஊடே, இல்லே பின்னடி அடிநாதமா ஒலிக்கிற இதயத்தினேட பரிசுத்தமான குரலேக் கேட்க நாம தெரிஞ்சுக்கணும். தன்னேட ஆழ்ந்த காதலேக்கூட ஒரு பெண் சிக்கிரத்திலே வெளியிடமாட்டா. நாமதான் பொறுமையா இருந்து அதைப் புரிஞ்சிக்கணும்.''

''அவளுக்காகவாவது நான் அந்த ஆபீசிலே கொஞ்ச நாள் இருந்து தீரணும்.''

ராஜாமணி மௌனமாக இருந்தான்.

அவனுடைய பிரம்மச்சர்ய வாழ்க்கையில் லாட்ஜ் ஒன்றில் தனி அறையில் புத்தகங்களின் துணேயோடு, உறவோடு, காலம் கழிந்து கொண்டிருந்தது. சர்க்கார் காரியாலயம் ஒன்றில் அவனுக்கு வேலே. வேலே நேரம் போக எஞ்சிய காலங்களில் நண்பர்களுடன் அரட்டையும், தரமான இலக்கிய நூல்களேப் படிப்பதுமே அவன் பொழுது போக்கு. முப்பது வயதாகியும் அவனல் திருமணம் செய்து கொள்ளாமல் இருக்க முடிந்தது. கேட்கும் நண்பர்களிடம் பிரம்மச்சர்ய நிலேயின் புனிதத்தை, அது தரும் சுதந்திரத்தைச் சிலாகித்துப் பேசுவான். தாய் தந்தையற்ற அவனுக்குத் திருமணம் முடிக்க அவனுடைய அண்ணன் செய்த முயற்சிகள் பலிக்கவில்லே. அவனிடம் முரளியைப் போன்று பலரும் தங்கள் வாழ்க்கைப் பிரச்னேகளேச் சொல்லும்போது அவனல் யோசனே சொல்ல முடிந்தது. தெளிந்த சிந்தனேயும் திட சித்தமும், குறிக்கோளுள்ள வாழ்க்கையும் அவனே அவர்களில் மாறுபட்டவனுக ஆக்கின.

''டேய் ராஜா! என்னடா திடீர்னு மௌனமாயிட்டே?''

''ஒண்ணுமில்லே! கடைசியா ஒண்ணு சொல்றேன். நினேவிலே வெச்சுக்கோ! உன்னுடைய எண்ணம் தூய்மையானதா இருக்கணும். உன் மனசிலே இப்போ ஏற்பட்டிருக்கிற இந்த வேகம் வெறும் இனக் கவர்ச்சியா இருந்திடக் கூடாது. உன்னேப் பூரணமா நம்பி அந்தப் பொண்ணு தனியா உன்னேட எந்த இடத்துக்கு வந்தாலும் நீ அவளோட பெண்மைக்குக் களங்கம் ஏற்படுத்திடக் கூடாது. பெண்களுக்குச் சில நேரங்களிலே உணர்ச்சி மிகுதியாலே பலவீனம் ஏற்படறதுண்டு. நிச்சயம் நீ ஜாதி மதம் மொழி இதுக்கெல்லாம் அப்பாற்பட்டு நின்னு அவளேக் கல்யாணம் செஞ்சிக்கத் தயாரா இருந்தா, உன்னுடைய காதல் வெற்றியடைய நான் வாழ்த்துவேன். இல்லே இதை நீ ஒரு விளேயாட்டா, கேவலமான மனநிலேயோட உன்னுடைய ஆண்மைக்கு அவளோட பெண்மையை இரையாக்கிண்டு அவளே ஒதுக்கித் தள்ள நினேச்சால்.... சே! அப்புறம் நான் உன்னே ஒரு மனுஷனு மதிக்க மாட்டேன்!'' சொல்லிவிட்டு அவன் எழுந்தான். விடுவிடென்று வெளியில் நடந்தான். ராவும் முரளிதரனும் வாயடைத்துப்போய் நின்றனர்.

(தொடரும்)





# நீங்கள் கேட்டவை / துராசு

✠ கந்தா ✠ கோவல்





✠ விசு, மதுரை-16

? அகோபிலமடம் ஜீயரின் கருத்துக்கள் மனசுக்கு வேதனை தருவதாக உள்ளன. இப்பேட்டியை வெளியிடாமலே இருந்திருக்கலாமே?

இந்திரா காந்தியோ, வீரமணியோ பேசுவது மனத்துக்கு வேதனை தந்தால் பத்திரிகைகள் பிரசுரிக்காமல் இருந்துவிடு கின்றனவா? மக்கள் அக்கருத்துக்களை விமரிசிக்காமல் இருக்கிறார்களா? ஜீயர் சொல்வது மட்டும் மனசுக்குப் பிடிக்கவில்லையெனில் அது வெளிவராமல் அமுக்கி விட வேண்டும் என்று ஏன் எண்ணுகிறீர்கள்? அதையும் விமரிசியுங்கள். விவாத, விமர்சனங்களால்தான் உண்மை தெளிவாகும். தைரியமாக இருங்கள்.

✠ எஸ். சிவசங்கர், ஸ்ரீமுஷ்ணம்

? 4-4-82கல்கியில்பாடப் புத்தகங்களில்தில்லுமுல்லு செய்து சரித்திரத்தையே மாற்றி எழுத சதி நடக்கிறது என்று தலையங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறது. விவரம் தேவை.

''சரித்திரப் பாடப் புத்தகங்களில் உள்ள சரித்திரச் சிதைவுகளைச் சீர்படுத்த வேண்டும்'' என்று காரணம் கூறிக் கொண்டு அதற்காக மத்திய கல்வி அமைச்சகம் ஒரு சுற்றறிக்கையை அனுப்பியுள்ளது. அது சரித்திரப் பாடப் புத்தகம் எப்படி எழுதப்பட வேண்டும் என்று 'வழி காட்டு'கிறது. தேசிய ஒருமைப்பாட்டினைக் கருத்தில் கொண்டு இப்படி 'வழிகாட்டு'வதாகக் கல்வி அமைச்சகம் கூறுகிறது. ஆனால் இந்தச் சுற்றறிக்கையின் அடிப்படையில் சரித்திரம் 'திருத்தி' எழுதப்படுமானால் அது சரித்திர உண்மைகளையே மறைத்து விடுவதாகும் என்று சரித்திர அறிஞர்கள் பலர் கருதுகிறார்கள். சரித்திர உண்மைகளிலிருந்து நாம் பாடம் கற்றுத் திருந்த வேண்டுமேயன்றி சரித்திரத்தையே மாற்றி மூளைச் சலவை செய்து ஒருமைப்பாட்டை உருவாக்க முடியாது. உலகம் சிரிக்கும்.

✠ வேலய்யா, சென்னை-28

? சென்ஸார்கள் பாரபட்சமாக நடப்பதாக ஆர்.எம்.வீ. குற்றம் சாட்டுகிறாரே!

! உண்மை இருக்கிறது. ஆனால் தமிழ்த் திரைப்படங்களை சென்ஸார் நசுக்கப் பார்ப்பதாக இவர் சாடுவதுதான் விந்தை. தமிழ்த் திரை உலகு வளம் பெற ஹிந்தி ஆங்கிலத் திரைப் படங்களில் அனுமதிக்கப்படும் செக்ஸ், வன்முறைக் காட்சிகள் தமிழ்ப் படங்களிலும் அனுமதிக்கப்பட வேண்டும் என்கிறாரா? நீ சோரம் போய்ச் செல்வம் சேர்க்கும்போது நான் மட்டும் கற்பைக் காத்துக் கொண்டிருக்க வேண்டுமா என்று ஒருத்தி இன்னொருத்தியிடம் கேட்பது போல் இருக்கிறது, பேச்சு.

✠ செ. ஆசைத்தம்பி, சேலம்

? தண்ணீர் தண்ணீர் சிறந்த படமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளதே?

! அகில இந்திய ரீதியிலும் வெற்றி பெறுமல் ஒரு வோட்டில்தான் தோற்றது என்று வீரப்பன் கூறியிருக்கிறார். தேர்வுக் குழுவில் இருந்த தமிழர் சமயம் பார்த்து எங்கோ நழுவி விட்டாராம்! அதையும் சொல்லியிருக்கிறார். வீரப்பனால் இடித்துரைக்கப்பட்ட படம் என்றாலும் பரிசு பெறத் தகுதியுள்ள படம் பெறவில்லையே என்று அவர் வருத்தப்பட்டிருப்பதைப் பாராட்டலாம்.

✠ சிந்தாமணி, சாத்தூர்

? பொன்னியின் புதல்வர் எழுதிய சுந்தாவுக்கு டாக்டர் பட்டம் தந்திருக்கிறார்களாமே?

அவருக்கு மட்டுமல்ல, இ. வா. ஜ., அகிலன், நா. பா., இ. ஜானகிராமன் ஆகியோருக்கும் அண்மையில் உலகப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங் கியது. சில டாக்டர் பட்டங்களால் அதனை அடைபவருக்குப் பெருமை. வேறு சில டாக்டர் பட்டங்கள் அவற்றை ஏற்றுக் கொள்பவரால் பெருமை பெறுகின்றன. உலகப் பல்கலைக் கழக டாக்டர் பட்டம் இரண்டாவது ரகம்.

⌘ எஸ். காந்த், சென்னை-12
? செய்யக் கூடாததைச் செய்வது? செய்ய முடியாத தைச் செய்வது?
! செய்ய முடியாததைச் செய்வது இன் ஸாட்டை விண்ணுக்கு அனுப்பியது. செய் யக் கூடாததைச் செய்வது போதிய முன் னேற்பாடின்றி அவசரப்பட்டு அதை விண் ணுக்கு அனுப்பியது. அதன் முழு ஆற்றலை யும் பயன்படுத்த INSAT (India Not Sufficiently Advanced Technologically.)

⌘ பி. எல். பரமசிவம், மதுரை-1
? அநியாயம் நியாயம் ஆவது எப்போது?
! ஆந்திரப் பிரதேச சுற்றுப் பயணத்துக்கு பீகார் மாநில விமானத்தை ராஜீவ் காந்தி பயன்படுத்தி இரண்டு மாதங்களுக்குமேல் ஆகியும் அதற்கான வாடகையை யார் கேட்பது யார் கொடுப்பது என்று யாரா லும் தீர்மானிக்க முடியாதபோது!

⌘ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி
? மாணவன் அடிக்கும் காப்பிக்கும் எழுத்தாளன் அடிக்கும் காப்பிக்கும் என்ன வித்தியாசம்?
! இன்றைய கல்லூரி மாணவன் காப்பி அடிக்க உரிமை கோருகிறான். எழுத்தா ளன் காப்பி அடித்துவிட்டுப் பிறகு தனக்கு அதே கருத்து வேறு சந்தர்ப்பச் சூழலில் தோன்றியதாக சத்தியம் செய்கிறான். திரைக்கதை வசனகர்த்தா காப்பி அடிக் கும் உரிமையைக் காசு கொடுத்து வாங்கி விடுகிறான். அவார்டு பெறுகிறான். பால சந்தரை மட்டும் குறைகூறிப் பயனில்லை. தண்ணீர் தண்ணீர் திரைப்படமாக உரு வாகத் தொடங்கியபோதே விட்டுக் கொடுத்துவிட்ட கோமலையும் சாடத் தான் வேண்டும்.

⌘ டி. எல். ரெட்டி, வேலிடுபட்டி
? ஒரு குட்டி அரசியல் புதிர் கூறுங்களேன்?
! புதிர்: சரண் சிங்?
விடை: அரசியல் தம்மை விட்டுப் போய் ரொம்ப நாளாயிற்று என்று புரியாமல் தாம் அரசியலை விடப் போவதாகப் பய முறுத்திக் கொண்டிருக்கிறார்.

⌘ ஆர். சுப்பையா, சாத்தூர்
? ஆர். எஸ். எஸ். தேகப் பயிற்சிகளுக்கு அரசு உடனே தடை விதிக்காவிட்டால் தமது தொண்டர் களும் அதுபோன்ற பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்கிறாரே, மு.க.?
! ஏற்கெனவே சீரணி இரட்டியவர்தான். சீரழிந்தது அது. அன்று சொன்ன கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, இவற் றுக்கும் மேலாக தேச பக்தியையும் வளர்த் துக்கொள்ள தி. மு. க. வுக்குத் தேகப் பயிற்சி உதவுமானால் தி.மு.க.வும் தொடங் கலாம் தடையில்லை. ஆனால் இவர் அடிப் படை நோக்கமெல்லாம் எம். ஜி. ஆருக்கு இடைஞ்சல் பண்ணுவது ஒன்றுதான். ரத் தத்தின் ரத்தமும் உடன் பிறப்பும் மோதிக் கொள்வதிலேதான் முடியும் இவர் முயற்சி.

⌘ எல். ஆர். சுந்தரராஜன், பட்டினப்பாக்கம்
? கேள்விபதில் பகுதி இல்லாமல் பத்திரிகை நட்த்து வது கஷ்டம் - ஒப்புக் கொள்கிறீரா?
! கேள்வி – பதில் பகுதி எழுதுவது அதை விடக் கஷ்டம், ஒப்புக்கொள்கிறேன்.

⌘ ஆர். அரிகோபி, குடியாத்தம்
? பிற மதங்களைக் காட்டிலும் இந்து மதத்தில்தான் நாத்திகர்கள் அதிகம், காரணம் என்ன?
! நாத்திக வாதத்தையும் இந்து மதம் பெருந்தன்மையுடன் அனுமதிப்பதுதான்.

⌘ ரூ 10 பரிசு பெறுபவர்
எஸ். சிவசங்கர்
52, செங்குந்தன் தெரு,
ஸ்ரீ முஷ்ணம் - 608 703





இலக்கியத்தில் இறையுணர்வு

# தட்சிணாமூர்த்தியே!

**கீரன்**

**நா**கரிகங்களும் அவற்றை ஒட்டிய தேவைகளும் வளர்ந்து கொண்டே வருகின்றன. அதனால் மனிதனுக்குப் புறப் பொருள்களின் தேவை மிகுதியாகின்றது. இங்ஙனம் பொருளைச் சார்ந்தும், பொருளுக்காகவும் வாழ வேண்டிய நிலை வரும்போது மனித வாழ்க்கையில் பல சிக்கல்கள் தோன்றுகின்றன.

என்னதான் ஒரு மனிதன் வாழ்க்கையில் பொருள் ஈட்டினாலும் இறுதியில் வாழ்க்கை உண்ணுவதும் உறங்குவதுமாக முடிந்து விடுகின்றது. அதனால் மனிதன் இன்பங்களை நாடிச் செல்லும் பரபரப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு அமைதியாக இருந்தால் மட்டுமே நிம்மதி காண முடியும். இந்த வாழ்க்கைத் தத்துவத்தை விளங்கிக் கொள்வதற்கு எழுந்த வடிவே தட்சிணாமூர்த்தி வடிவம்.

கல்லால மரத்தின் கீழ் இருந்தபடி சனகன் முதலான முனிவர்க்கு வாயைத் திறக்காமலே, சின் முத்திரை மூலமாக இறைவன் உபதேசிக்கும் திருவுருவே தட்சிணாமூர்த்தி திருத்தோற்றம்.

பெரிய அறிவிருந்தும் பரபரப்பு அடங்கி விடுவதால் அந்த நிலையில் பேச்சும் ஒடுங்கிவிடும். அதனையே அனுபூதி என்கிறோம். இன்ப துன்பங்களைச் சமமாக மதிக்கும், 'பரபரப்பு அற்ற நிலையையே அனுபூதி என்று பலரும் கூறியுள்ளனர். ''சும்மா இரு, சொல்லற என்றலுமே, அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே'' என்று அருணகிரியாரும் ''பப்பற (பரபரப்பு அற) வீட்டிருந்து உணரும் நின்னடியார்'' என்று மாணிக்கவாசகரும் கூறியிருப்பது காண்க.

ஒவ்வொரு மனிதனும் அந்த அனுபூதி நிலையை அடைய தட்சிணாமூர்த்திப் பெருமானை முன்னிட்டுக் கொண்டு வணங்க வேண்டும்.

ஒரு மனிதன் வாழ்கின்ற காலத்துச் சன்மார்க்கனாக வாழ இயலாது துன்மார்க்கனாக வாழும்படி அமைந்து விட்டால்? அமைந்து விட்டால் என்ன? தெய்வத்தை நோக்கி உள்ளம் உருக முறையிட்டால் துன்மார்க்கனையும் அவன் சன்மார்க்கன் ஆக்குவான். தீவினை புரிந்த சூரனைத் தூயவனாக இறைவன் ஆக்கவில்லையா?

பரபரப்பு மிக்க இவ்வுலகில் மனித உயிர்கள் அமைதி காண வேண்டும் என்பதற்காகவே பக்குவம் மிக்க சனகாதி முனிவர்கள் அருகில் வீற்றிருப்ப, சொல்லரிய நெறியை அதாவது அனுபூதி நிலையை கல்லால பீடத்தையே செங்கமல பீடமாக்கித் தெட்சிணாமூர்த்தியாகிய இறைவன் உபதேசிக்கிறான்.

தட்சிணாமூர்த்திப் பெருமான் தன் கையில் சின் முத்திரை காட்டி உபதேசிக்கிறார். வலக்கையின் ஆட்காட்டி விரலைக் கட்டை விரலுடன் சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் விடுத்துக்காட்டுவது சின்முத்திரை. இதற்கான சித்தாந்த விளக்கமும் ஒன்றே. ஆட்காட்டி விரல் மனிதன்; கட்டை விரல் இறைவன். ஏனைய மூன்று விரல்களும் ஆணவம், கன்மம், மாயை என்பன. மனிதனிடம் அமைந்த ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றின் நாமம் கெட அவன் நோய் கெடுகின்றது. அமைதி பிறக்கின்றது என்பதே தத்துவம்.

''இறைவா! அகங்கை நிறைய மலர் கொண்டு தூவி, உடல் எல்லாம் புளகிப்ப, அன்பினால் உருகி, விழிநீர் பெருக முக்தி என்னும் ஆசைக் கடலுக்குள் விழுந்து 'சங்கரா! சுயம்புவே!' எனக் குழறும் வகையில் மொழி பேசிவணங்கும் நான் சன்மார்க்கனல்ல, துன்மார்க்கன் எனினும் என்னை நீ ஏற்பாய்! பக்குவ மிக்க சனகாதி முனிவர்கள் வீற்றிருப்பச் சொல்ல முடியாத நெறியாகிய அனுபூதியை ஒரு செய்கை என்னும் சொல்லால் உணர்த்தியே அனுபூதி காட்டுகின்றாய். கல்லால பீடமே செங்கமல பீடமாக வீற்றிருந்து அருளும் சித்தாந்த முக்தி முதலே! சிரகிரி விளங்க வரும் தட்சிணாமூர்த்தியே! சின்மயானந்த குருவே!'' என்று வேண்டுகின்றார் தாயுமானவர்.

''அங்கைகொடு மலர் தூவி அங்கமது புளகிப்ப
அன்பினால் உருகி விழிநீர்
ஆறாக ஆராத முக்தியினது ஆவேச
ஆசைக் கடற்குள் மூழ்கிச்
சங்கர சுயம்புவே! சம்புவே எனவும் மொழி
தழுதழுத்திட வணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையும்
தண்ணருள் கொடுத்து ஆள்வையோ?
துங்கமிகு பக்குவச் சனகன்முதல் முனிவோர்கள்
தொழுது அருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லால் உணர்த்தியே
சொரூப அனுபூதி காட்டிச்
செங்கமல பீடமே கல்லால் அடிக்குள் வளர்
சித்தாந்த முத்தி முதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணாமூர்த்தியே!
சின்மயானந்த குருவே!

# மோது... ஓடு...

வின்ஸ்டன்

ஜ. கிருபாகரன்

'புத்தி போகுது் பாத்தியா?' என்று தன் மண்டையில் தானே குட்டிக் கொண்டான் கோவிந்தன்.

பின் சீட்டில் இன்று 'ஏ' சினிமா இருக்காது. ரோட்டைத்தான் பார்க்கணும். தார் ரோடு... சிமெண்ட் ரோடு... செம்மண் ரோடு... காட் ரோடு.....

போர்தான் அடிக்கும். பரவாயில்லே. வேலே கச்சிதமாகமுடிந்தால் கனேயாகப்பத்தாயிரம். அப்புறம் 'அப்பப்போ' கறந்துக்கலாம்.... அடுத்த தபா பெங்களூர்லே ஒனர் டபுள் ரூம் எடுத்துத் தங்கும்போது 'அம்போ' என்று காரின் பின் சீட்டில் முடங்க வேண்டி வராது. பக்கத்து ரூமையே எடுக்கோணும்... ஜலஜா வோட ஜாலியா இருக்கோணும்!

ரியர் வியூ மிரரை இருக்க வேண்டிய இடத்திற்கு நகர்த்தினன்.

பெங்களூர் சிடியின் இரவு பத்து மணிச் சூழ்நிலேயில் ஆத்மநாபன் லாட்ஜிலிருந்து வெளியேறிக் காரை நோக்கி வந்து கொண்டிருந்தான். நடை சற்றே தள்ளாடியது.

ஆத்மநாபன் ரொம்ப சிம்பின் ஆசாமி. குட்டி நகை வியாபாரி. பனியனின் முன்புறம் எப்போதும் கிழிந்து தொங்கிக்கொண்டே இருக்கும்.

எட்டடிக்குப் பத்தடியில் பெட்டிக் கடை டைப்பில் வியாபார ஸ்தலம். மூணடி நீளம், ரெண்டடி அகலம், மறுபடி மூணடி ஆழத்தில் ஒரு கண்ணாடியை உள்ளடக்கிய கன செவ்வகப் பெட்டிக்கு முன் சம்மணம் போட்டு உட்கார்ந்திருக்கும்போது பார்த்தால் பரிதாபமாக இருக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தொங்கும் சின்னச் சின்னச் செயின் களைக் காவல் காத்துக் கொண்டு....

முழுவதுமாக ஏ.சி. செய்யப்பட்ட பங்களாவில்தான் வாசம். யார் இல்லே என்றூர்கள்... அது அவன் அப்பாவோடது!

குளுகுளு காரில்தான் பயணம். மறுத்தேனு என்ன? அது அவன் அம்மாவோடது!

வேலி வேலியாக நிலம். செத்துப்போன மனேவி சீதா, அவனோட தங்கை கீதா, அவளோட மச்சினிச்சி ரீடா, அவளோட... உள்ளங்கையில் அடித்துக் கிள்ளிச் சொல்வேன். அவனுக்கென்று ஒன்றுமில்லே. ஏழைதான்!

ஒரு வார காலமாக அவன் அதிகமாகக் குழம்பி இருந்தான்.

அப்பா, தாத்தா என்று கொத்தடிமைகளாக உழைத்தவர்கள் பரம்பரையில் இன்று கோவிந்தன், ஆத்மநாபன் குடும்பத்துக்குக் கார் டிரைவர். அன்றிலிருந்து இன்றுவரை அதே பெட்டிக் கடை. வீடு வாசல்தான் மாறிவிட்டது.

கோவிந்தனின் முன்னேர்கள் சம்பளத்தைத் தவிர வேறெதையும் பார்த்தறியாதவர்கள். இவன் 'டிப்ஸ் எக்ஸெட்ரா விலேயே சொந்தமாக டாக்ஸி ஒன்று வாங்கி ஓட்டணும் என்று கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவன். அன்று துணிந்து கேட்டான்: ''எதைப் பத்தியும் கவலேப்படாதீங்க முதலாளி. என் உதவி தேவைப்படுமா?''

திருட்டு நகை வியாபாரத்தை அவன் மேம்போக்காகத் தெரிந்து வைத்துக்கொண்டிருந்தான். (ஆங்!... அதுதான் தொழில்!)

ஆத்மநாபன் சிறிது நேரம் அவனேயே உற்றுப் பார்த்தான்.

''வா, வீட்டுக்கு'' என்று கடைச் சாவியை வீசிவிட்டு வெளி நடந்தான்.

ஒன்றுமே பிடிபடவில்லே கோவிந்தனுக்கு. பூட்டு வேறு மக்கர் செய்தது. ஒரு வழியாகப் பூட்டிக் கொண்டு, ஓட்டமும் நடையுமாகப் பின்தொடர்ந்தவன், பங்களாவின் முகப்பில் நின்றிருந்த காரின் பின் சீட்டில் முதலாளியைக் கண்டு குனிந்தான்.

''வண்டியை எடு.''

டாஷ் போர்டில் சாவி தொங்கியது. டிரைவர் சீட்டில் அமர்ந்து கொண்டான். கேட்டான்: ''எங்கே முதலாளி?''

''சிமெண்ட் ரோட்.''

நகரை அடுத்த நெடுஞ் சாலேயில் கார் காற்றைக் கிழித்தது.

இண்டர் செக்ஷனில் ''ட்ரங்க் ரோட்'' என்ற ஆணே கேட்டு ப்ரேக்கில் காலே வைக்காமலே லாகவமாக ஒடித்தான் கோவிந்தன்.

கண்ணுக்கு எட்டிய தூரம் வரை எந்த ஊர்தியும் துணைக்குக் காணும். ''நேராக வேகமாகப் போ. 120ஐ முட்ட முடியுமா உன்னுல்?''

முள் முனகிக்கொண்டே மோத முற்பட்டது. சாலேயின் இரு புறமும் குட்டிக் குட்டிக் கிராமங்கள் 'விசுக் விசுக்'கென்று தோன்றிய கணமே மறையலாயின.

தூ... ஊ...ரத்தில் மற்றுமொரு குட்டிக் கிராமம் எதிர் நோக்கி வந்து கொண்டிருந்தது. இடையில் சாலேயின் இடப் புறமாகச் செம்மறி ஆடுகள் மேய்வதும் புலனுயிற்று. ''நிறுத்து'' என்றுன் ஆத்மநாபன்.

கார் நிறுத்தப்பட்டது. அடுத்த ஆணேக்குக் காத்திருந்தான் கோவிந்தன்.

''டாஷ்போர்டில் விஸ்கி இருக்குது பார்!'' கை மாறியதும் கொஞ்சம் கொஞ்சமாக ஸ்ட்ரெய்ட்டாகவே உறிஞ்சினுன் ஆத்மநாபன். ''முதலாளிக்கு எதாவது மனக்கஷ்ட முங்களா?'' என்று கேட்டான் கோவிந்தன்.

நேரடியாகப் பதில் வரவில்லே. பார்வையிலும் மாற்றமில்லே. ஆத்மநாபன் மறு கேள்வி போட்டான்: ''வண்டி எடுக்கிறதுக்கு முன்னுடி என்ன சொன்னே?''

தலேயைச்சொறிந்தவன் ''மறந்திட்டேன்'' என்றுன்.

''விடு... பணம் சம்பாதிக்க ஆசை இருக்கா?''

கோவிந்தன் சிரித்தான். ''இருக்காதுங்களா பின்னே?''— சொந்தமாக ஒரு டாக்ஸி கற்பனையில் மிதந்து வந்தது.

''உன்னை நம்பலாமா?''

''பரம்பரை பரம்பரையா உங்க வீட்டு உப்புத்தான் முதலாளி..எங்க பரம்பரையிலே ரத்தமா மாறி ஓடுது.துரோகம் செய்வேனா?''

''நம்பறேன்... ரத்தத்தைப் பார்த்தாப் பயப்படுவியா?''

''ரத்தக் காட்டேரியைப் பார்த்தாக் கூடப் பயப்பட மாட்டேன். காரேத்திக் கொன்னுடுவேன்.''

''பார்க்கலாம்.'' ஆத்மநாபன் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான். முதலாளியின் மனநிலை இன்னமும் விளங்கவில்லை கோவிந்தனுக்கு. சற்று நேரத்துக்கெல்லாம் அடுத்து வந்த ஆணை அவனுள் வியப்பை ஏற்படுத்தியது.

''அதோ பார்... முதல் செம்மறி ஆடு ரோட்டைக் குறுக்காகக் கடக்குது இல்லே... அதைத் தொடர்ந்து அத்தனையும் இப்போ பின்னாலே போகும். டாப் ஸ்பீடிலே நீ அந்தக் கூட்டத்துக்கு நடுவே புகுந்து வெளி வர்றே.. போ!''

''நிஜமாத்தான் செய்யச் சொல்றீங்களா?''

''ஏன் பயமா இருக்கா?''

சிவுக்கென்றது கோவிந்தனுக்கு. 'பயம் என்ன வேண்டிக் கிடக்குது. வரப்போறதை முதலாளி சந்திக்கப் போறார்.... பயமா? எனக்கா? — கீ பக்கம் கையைக் கொண்டு சென்றான். விநாடி நேரத்தில் உயிர்பெற்ற வண்டி சீறிப் பாய்ந்தது. அடுத்த இரு நிமிடங்களுக்குள் ஆட்டுக் கும்பலை உழுதுவிட்டு வெகு தூரம் சென்று விட்டது. கல்லையும் மண்ணையும் வாரி இறைத்துக் கொண்டு பின்னால் ஓடி வந்த இடையர்கள் இரைக்க இரைக்க நின்று விட்டார்கள். சேதமில்லை.

அப்புறம்தான் ஆத்மநாபன் வண்டியை நிறுத்தச் சொன்னான். திரும்பச் சொன்னான். விபத்து நடந்த இடத்துக்கு ஓட்டச் சொன்னான்.

ஐந்நூறு ரூபாய் நஷ்ட ஈடு இடையர்களைப் பல்லிளிக்க வைத்தது. திட்டுத் திட்டாய்த் தேங்கியிருந்த மழைநீரைச் சேகரித்துக் காரின் மேல் சிதறியிருந்த ரத்தக் கறைகளைக் கழுவியும் விட்டார்கள்.

மூளை சிதறிக் கிடந்தது ஒன்று. குடல் சரிந்து கிடந்தது மற்றொன்று. கால்ஒடிந்து கிடந்தது பிறிதொன்று...

கார் வீட்டை நோக்கிப் புறப்பட்டபோது, 'போன உடன் சர்வீஸ் ஸ்டேஷனில் விடணும்' என்று எண்ணிக் கொண்டான் கோவிந்தன். கூடவே அந்தக் கேள்வி: 'ஏன்? ஏன்?'

அன்றிரவு ஏ. சி. ரூமில்தான் அது புரிய வந்தது.

நாகையனும், பூதலிங்கமும் சிறைப் பறவைகள். மூன்று மாதத்துக்கு முன்தான் ஓராண்டு வெறுங் காவல் தண்டனையை ஓய்வாக அனுபவித்து விட்டுத் திரும்பியிருக்கிறார்கள். பூட்டை உடைத்துத் திருட முயன்ற குற்றம். இதில் வேடிக்கை என்னவென்றால், ஆண்டாண்டு காலமாக அவர்கள் வெகு சிறப்பாக நடத்தி வந்த நகைக்களவுகள் தொடர்பாகத் தண்டனை அனுபவித்ததே இல்லை.

அவற்றுள் ஒன்றுதான் ஊர் மாரியம்மன் கோவில் திருட்டு. சொக்கத் தங்கத்தில் சாத்தப்பட்டிருந்த ஆபரணங்கள் அபேஸ். திருடனுக்குத் துணைப் போகும் ஆத்ம நாபன் இருக்கக் காசாக்குவது கடினமா என்ன?

சொற்பவிலைக்கு(ரூ.20,000 மட்டு) அபகரித்துக் கொண்டான் என்பது சிறைச்சாலையில் கான்விக்ட் வார்டர் கூற்றிலிருந்து தெரிய வந்தது. ''என்னடா திருடனுங்க நீங்க? பேப்பர்ல போட்டிருக்கான்







# பிசுபிசுக்காத புத்தாண்டு தீர்மானங்கள்

நால்வரது புத்தாண்டு தீர்மானங்களை 3—1—82 இதழில் பிரசுரித்தோம். மூன்று மாதம் சென்ற பின் அவை எந்த அளவு நிறைவேறின பார்க்கலாம் என்று கூறியிருந்தோம். அப்படிப் பார்த்ததில் நாலுக்கு இரண்டு பழுதில்லை எனக் காண்கிறோம்.

**திருமதி ஒய்.ஜி.பி.**

(முதல்வர், பத்மா சேஷாத்ரி சீனியர் செகண்டரி பள்ளி, சென்னை-34)

திட்டமிட்டதை விட மிகவும் வெற்றிகரமான முறையில் Para Professionals பயிற்சியை பெப்ருவரியில் தொடங்கி நடத்திவருகிறோம். 45 பெண்மணிகள், அனைவரும் குடும்பத் தலைவியராக மட்டுமே இருப்பவர்கள் மூன்று மாதங்களுக்கு முழு நேரப் பயிற்சி பெறுகிறார்கள். யு. ஜி. சி. அமைப்பின் சார்பில் டாக்டர் திருவேங்கடாச்சாரி, ஆங்கிலத் துறையைச் சேர்ந்த திரு சண்முகம், திருமதி சண்முகம், திரு ஏ. கே. சாம்பன், பிரிட்டிஷ் கவுன்சிலைச் சேர்ந்த திரு ஜான் போன்ற பலர் ஆர்வமுடன் வழி காட்டி இந்தப் பயிற்சியை வெற்றிகரமாக ஆக்கியுள்ளார்கள். வருடா வருடம் இந்தப் பயிற்சியை நடத்தலாம் என்றுகூடத் திட்டமிட்டு வருகிறோம்.

**திரு கோமல் சுவாமிநாதன்**

ஆதிவாசிகள் படும் அல்லல்களைப் பற்றிய நாடகம் 'ஓர் இந்தியக் கனவு' ஏற்கனவே திட்டமிட்டபடி மேடை ஏறிவிட்டது. இந்த ஜூலையில் இதைத் திரைப்படமாக ஆக்கும் பணியிலும் ஈடுபட்டுள்ளேன்.

'அனல் காற்று' படமும் ஏறக்குறையத் தயாராகி விட்டது. விரைவில் திரையில் வரும்.

நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் பிரச்னை பற்றிக் குறிப்பிட்டேன். அதுவும் நாடக வடிவம் தயாராகி விட்டது. காட்சியமைப்புக்காக ஒரு முறை தன்பாத் சுரங்கப் பகுதியைப் பார்வையிட்டு வரவேண்டும். படப்பிடிப்பு மும்முரத்தில் அதற்கு நேரம் கிடைக்கவில்லை. பேட்டி: யெஸ்பால்

பார்த்தீங்களா, — ஊர் மாரியம்மன் கோவில் திருட்டு. புராதன நகைகளாம். வெளி நாட்டிலே வித்தா லட்சக் கணக்கிலே போகுமாம்.... அடிச்சா அப்படி அடிக்கோணும் லக்கி ப்ரைஸ்!''

ஆத்மநாபனுக்கு அப்போதே தெரியும். அதனால்தான் மாமூலாகச் செய்வது போல் உருக்கி விற்காமல் ஆறப்போட்டிருந்தான். இந்த வருஷம்தான் நல்ல பார்ட்டிக்கு ஒதி வைக்கணும் என்று உத்தேசம். அதற்குள்...

இப்போது விதியே என்று சிறைப் பறவைகளுக்கு ரயிலடிகளில் தீனி போட்டுக் கொண்டிருந்தான்.

இதுவரை அறுபதாயிரத்துக்குமேல் காலி. ஐந்து 'ல'வோடு நிறுத்துவார்களா? ப்ளாக் மெய்ல் தொடர்ந்தால்... நோ... கதையை முடிச்சுட வேண்டியதுதான்.

திட்டமிட்டபடி அந்த ஞாயிறு கோவிந்தன் போனன் இரயிலடிக்கு. வழக்கம் போல் தாமதமாய் வந்து நின்ற இரயிலிருந்து இறங்கியவர்களில் இருவர் மட்டும் வெளியேற அவசரம் காட்டவில்லை. அவனையே உற்று நோக்கிக் கொண்டு நின்றிருந்தார்கள். நெருங்கினான்.

''....முதலாளி படுத்த படுக்கையா இருக்கார்...ஃபோன்லேசொல்லியிருப்பாரே! நான்தான் அவன்... இதோ அவர் சொன்ன அடையாளம்... காதுல பூ வச்சிருக்கேன்.''

பேச்சு தொடர்ந்தது. ''கோவில் நகை சமாசாரம்தானே?'' என்றான். ''பதிமூணு லகரத்துக்கு முடிச்சாச்சு'' என்றான். ''வியாழக் கிழமை பெங்களூர்லே கேஷாக செட்டில் மெண்ட்'' என்றான்.அப்புறம் கிசுகிசுத்தான். ''மூணுலே ஒரு பாகம் தர்றதா இருந்தா நான் ஒத்துழைக்கிறேன்... பெங்களூர்லே ருந்து திரும்பறப்போ... ஒரு செட்-அப்''— இரயில் எப்போதோ போய் விட்டது. இப்போது அவர்கள் காருக்குள் அமர்ந்திருந்தார்கள்.

பெங்களூரிலிருந்து பலமனேரி சுமார் 90 கி. மீ. அங்கிருந்து சென்னையிலிருந்து பம்பாய்க்கு வழி காட்டும் என். எச். 4 ரோடு சுமார் 8 கி. மீ.

வியாழனன்று இரவு சரியாகப் பதினொரு மணிக்கு 'டிப் அண்டு டிம்மில்' வெளிச்சம் காட்டிக் கொண்டு ஒரு கார் அங்கு வரும். நாகையன் நடு ரோட்டில் முகம் குப்புறப் படுத்திருக்க, தலைமாட்டில் அமர்ந்திருந்த பூதலிங்கம் உதவி கேட்டுக் கையசைக்க, கோவிந்தன் காரை நிறுத்துவான். அப்புறம் ஒண்ணுக்கு மூணு....

பெங்களூர் சிடியின் இரவு பத்து மணிச் சூழ்நிலையில் ஆத்மநாபன் லாட்ஜிலிருந்து வெளியேறி, 9.50க்கு பில்லைக்கட்டி இரசீது பெற்றுக் காரைக் கிளப்பப் பத்து மணி ஆகிவிட்டது.

பலமனேரியை அடையு முன் சுமார் பத்துப் பதினைந்து கிலோ மீட்டருக்கு இந்தப்பக்கம் ஒதுக்குப்புறமாகக் காரைநிறுத்தினான் கோவிந்தன்.

# கடுகளவு ஓ.ஓ.பி நீலம் கடலளவு வெண்மை

- ஜெர்மன் தொழில் நுட்பத்தில் உருவான உயர்ந்த ரக நீலம்.
- கூடுதலான வெண்மை சக்தி.
- நீரில் சீராகக் கரைவதால் ஆடைகளில் நீலப் புள்ளி விழாது.
- விலையோ அதிகம் இல்லை.

# ஓ.ஓ.பி நீலம்



மணிக்கட்டைப் பார்த்தான் ஆத்மநாபன். 10.50 என்றது கேஸியோ.

''க்விக்....சீக்கிரம்'' என்றான்... பதற்றம் நடுக்கம்....

டிக்கியிலிருந்து உருட்டுக் கட்டையை எடுத்தான் கோவிந்தன். அவனுக்கே உரித்தான அவசரம் அவன் செய்கைகளில் தெரிந்தது. Easy Easy Boy திட்டத்தில் தப்பு நடந்துடப் போகுது... Steady steady.

காரைச் சுற்றி வந்து நின்றபோது நாற்புறமும் காற்றுத் தடுப்புக் கண்ணாடிகள் தெறியிருந்தன. மீண்டும் டிக்கியிலிருந்து ஹாக்கி பந்து அளவிலான கூழாங் கற்களை எடுத்து வீசி நாலாபுறமும் கார் 'பாடி'யைச் சொட்டையாக்கினான். முன் சீட்டிலும் பின் சீட்டிலும் நாலைந்து கற்களைப் போட்டு விட்டு டிக்கியை மூடிக் காரைக் கிளப்பிய போது மணி 10-52.

அதாவது வழிப்பறிக் கொள்ளையர்கள் மடக்க முற்பட்டபோது நிற்காமல் காரைப் பறத்தினார்களாம். அது முதல் கட்டம் தானும். அடுத்த ஐந்தாவது கி.மீ.யில் நிற்காமல் வந்து கொண்டிருந்த காரை நோக்கி இன்னொரு பகுதியினர் கற்களையும் கட்டைகளையும் வீசி நிறுத்த முயல, காருக்குச் சேதம். அதே வேகத்தில் பலமேனரி என். எச். 4 காட் ரோடில் தற்போது உதவி கேட்கும் பாவனையில் காரை நிறுத்த முயன்றவர்களைக் கடக்க முயற்சிசெய்கையில் எதிர்பாராத விதமாக...

நாகையனும் பூதலிங்கமும் கூழாகிப் போனார்கள்.

என். எச். 4 ரோடு....

ஆட்டு ரத்தம் வேறு... மனித ரத்தம் வேறு... கோவிந்தனுக்கு இப்போதுதான் கிலி பிடித்துக் கொண்டது. ரத்தம்..... ப்ளட்... கொலை... மர்டர்.... ஜெயில்... கண்டம்!

110க்கு கீழே இறங்க மறுத்தது வேகம்· சீக்கிரம் சித்தூரை அடைந்துவிட வேண்டும்· விரல்களில் நடுக்கம். நெடுஞ்சாலையில் ஓட்டம் சீராக இல்லை.

ஆத்மநாபன் அலறினான். ''மெள்ளப் போ. வேகத்தைக் குறை... முதல்லே தெரியற போலீஸ் ஸ்டேஷன்லே நிறுத்து. அப்புறம் வீட்டுக்குப் போய்ச் சேரணும். முழுசா.''

செங்கல் கட்டிடம் சிவப்பாகத் தெரிந்தது இரத்தச் சிவப்பு...

ஆத்மநாபனும் கோவிந்தனும் போலீஸ் லாக் அப்பில் அடைபட்டுக் கிடந்தார்கள்.

**போ**லீஸ் ஸ்டேஷனில் ஸ்டேட்மெண்ட் கொடுக்கும்போது இரவு மணி 11.45.

சேதமுற்றிருந்த காரைப் பார்த்தபோது சப் இன்ஸ்பெக்டருக்குச் சந்தேகம் ஏற்பட்டது. சேதத்தின் பரிமாணம் செயற்கை என்றது. லாட்ஜில் போடப்பட்டிருந்த நேரம் 9.50 பி.எம். என்று கண்டிருந்தது. கூட்டிக் கழித்துப் பெருக்கி வகுத்துப் பார்க்கையில், சுமார் ஒன்றே முக்கால் மணி நேரத்தில் சுமார் 175 கி. மீ. தூரத்தை மணிக்கு சராசரி 100 கி. மீ. வேகத்தில் கடந்து வந்திருப்பதாக விடை கிடைத்தது.

அந்த வேகத்தில் ஒரு ஸ்பாட்டைக் கடக்க எத்தனை விநாடிகள் பிடிக்கும்... ஒருவன் கையைத் தூக்கித் தோளுக்குப் பின் கொண்டு சென்று கல்லை வீச எத்தனை விநாடிகள்... அந்த நேரத்தில் கார் எவ்வளவு தூரம் சென்றிருக்கும்... அப்படியிருக்க காரின் பின்புறத்து ரியர் கிளாஸ் கல்லடி பட்டு உடைய வாய்ப்பே இல்லை....

அவசரம்... கோவிந்தன் பின்புறக் கண்ணாடியையும் சேர்த்து உடைத்திருந்தான். Stupid. அன்று ஆட்டிடையர்கள் கல்லையும் மண்ணையும் வாரி இறைத்துக் கொண்டு பின்னால் ஓடி வந்தார்களே, காருக்குச் சேதம் ஏற்பட்டதா? நினைவில் வைத்துக் கொள்ள வேண்டாம்? அறிவு கெட்ட செம்மறி ஆடு!

செட்-அப்பாம், செட் அப்! முட்டிக்கு முட்டி தட்டப் போகிறார்கள்.

கோவிந்தன் கக்கிவிடுவான்.
சொந்த டாக்சியா ஓட்டப் போறே?
மறந்திடு!
கோவிந்தா; கோ...ஓ...விந்தா!

## ஆன்றோர் வாக்கு...



ஜீவனமே குறி என்றால் யார் யாரிடம் அதிகம் பணமோ, பெரிய பதவியோ போகிறதோ அவர்களைப் பார்த்து மற்றவர்கள் அசூயைப்பட வேண்டியதுதான். சண்டை போட வேண்டியதுதான். அவனவனுக்கும் அதது கடமை என்கிறபோது அதில் உயர்வு தாழ்வு இல்லவே இல்லை. ஆனால் பணம் குறிக்கோள், பதவி குறிக்கோள் என்றால் அதிகம் பணம் சேர்க்கிறவன் உயர்த்தி என்ற பேத அபிப்பிராயங்கள் வந்து கொண்டுதான் இருக்கும்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

பகுத்தறியும் சக்தி இல்லாத எவனுக்கும் கொள்கை என ஒன்று இருக்காது. ஒரு கொள்கையுடையவன் பகுத்தறியும் சக்தி உடையவனாகவே இருக்க வேண்டும்.

—பாரதியார்

சிந்தனைக்கு உயிரோட்டம் கொடுப்பதே செயல்.

—சாக்ரட்டீஸ்

**தாளிப்பு : கடுகு**

# கமலாவின் கடிதங்கள்



மிகவும் சுவாரசியமாய்ப் பேப்பர் படித்துக் கொண்டிருந்த சமயம், 'சட்'டென்று என் மேல் ஒரு கவர் வந்து விழுந்தது. அது அம்பாக இருந்திருந்தால் ராம பாணத்தைப் போல் என்னையே துளைத்துக் கொண்டு போயிருக்கும்! நல்ல காலம் அது என் அருமை மனைவி கமலா எழுதிய கடிதம். கமலா சமையற்கட்டிலிருந்தபடியே ஹாலில் இருந்த என் மேல் அந்தக் கவரை வீசியிருந்தாள். பிரித்துப் படித்தேன்.

என் உயிருக்குயிரான பிரியமான அன்புக் கணவருக்கு அடியாள் கமலா எழுதிக்கொண்டது. உங்களுக்கே நன்றாக இருக்கிறதா? நாலு தரம் கேட்டேன், பக்கத்து வீட்டு மாமி 'மூன்றும் பிறை'க்கு வரச் சொல்கிறாள். நான் போகட்டுமா என்று கேட்டேன். ஒன்றும் பதில் சொல்லாமல் பாட்டுக் கச்சேரிக்குப் போய்விட்டீர்கள். நான் சினிமா போய்விட்டு வந்தால் ஏன் இப்படிக் கோபப் படுகிறீர்கள்? இப்படிக் கொடுமைப்படுத்துகிறீர்களே, சரியா?

இப்படிக்கு, கமலா

உடனே நான் ஒரு கடிதம் எழுதினேன்.

என் காதல் கிளியே, அன்பே, தேனே, மானே: உனக்குக் கொழுப்பு அதிகமாகி விட்டது. என் வார்த்தைக்கு மதிப்புத் தருவது கிடையாது. பக்கத்து வீட்டு மாமி கூப்பிட்டால் போய்விடுவதா? நான் ஸ்ரீதேவியின் விசிறி இல்லை என்று தெரிந்திருந்தும் மூன்றும் பிறை போனது என் கன்னத்தில் மூன்று அறை தந்ததற்குச் சமானம். உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட பாவத்துக்காக அனுபவிக்கிறேன்.

இப்படிக்கு அன்புக் கணவன்

'என்னா... கைவேலையாக இருக்கிறேன். இந்த லெட்டரை வாங்கிண்டு போங்கோ' என்று கமலா குரல் கொடுக்கவே சமையல் அறைக்குப் போய்க் கவரை வாங்கிக்கொண்டு வந்தேன். அதில் எழுதியிருந்தாள்: ''என் பிரிய நேசா, கண்கண்ட தெய்வமே! பி.ஏ. வில் கோட் அடித்த உங்களுக்குக் கையில் கனையாக மூவாயிரம் ரூபாய் கொடுத்தார் என் அப்பா. என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டதற்கு அனுபவிக்கிறீர்களாமே! சபாஷ்! ஸ்ரீதேவிக்காக பதினாறு வயதினிலே ஏழு தடவை பார்த்தீர்கள். இப்போது அவர் வேண்டாதவர் ஆகி விட்டாரா? சினிமா சாக்காக வைத்துக் கொண்டு என் மேல் எரிந்து விழுகிறீர்களே. உண்மையில் வேறு ஏதோ காரணம் இருக்கிறது. நான் பிறந்தகம் போகிறேன். என்னை நீங்கள் வந்து பார்க்கா விட்டால் பரவாயில்லை. நான் தினமும் உங்களைப் பார்க்க வருவேன். முதலில் உங்களுக்கு நான் மனைவி; அப்புறம்தான் விரோதி.

என்றும் உங்கள் கமலா

நான் மட்டும் சும்மா இருப்பேனா? தக்க பதில்: எழுதிக் கொடுத்தேன்.

''என்னா... பேப்பர், பேனாவுடன் இங்கே வாங்கோ... அடுப்பில் வெங்காய பஜ்ஜி போட்டுக் கொண்டு இருக்கேன்... சீக்கிரம் வாங்கோ!'' என்று (கூக்)குரல் கொடுக்க, நான் போனேன்.

''லெட்டர் எழுதக் கை ஒழியவில்லை. நான் டிக்டேட் பண்றேன். எழுதுங்கோ.... உம்... இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றுவன் எனப்படும் என் அருமைக் கணவருக்கு... இனி மேல் கடிதம் எழுதப் போவதில்லை. வாயார நாலு திட்டுத் திட்டுவதில் உள்ள சுகம், எழுதுவதில் இல்லை'' என்று கூறிவிட்டு, கமலா ''ஆமா... நா கேக்கறேன். ஒரு சினிமா போய்விட்டால் என்ன கொலை பாதகமா? உங்க பரம்பரையிலே... (அவள் மேலே கூறிய வார்த்தைகளை வெளியிடுவது என் கௌரவத்துக்கு உகந்ததல்ல!)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

உங்களைப்
போன்றவர்களை
திருப்தி செய்ய
சார்மினாரால்தான்
முடியும்

சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்பீர்




சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

* அதிகபட்ச விலை, தலவரிகளைப் பொறுத்தது.

CASVS-259-203 TAM

Main Dealer: M/s CONCORDE AGENCIES, Madras-600006

REGISTERED No. M. 4302
Registered as a Newspaper in Sri Lanka

# ராசி வண்ணம்

## கடகம்

முழுமதி முத்து திங்கள் முக்கண்ணன்
பழுதில் தூய வெள்ளை வண்ணம்.

எண் இரண்டு என்றிவையெல்லாம்
கண்ணெனச் சொல்வர் கடகராசிக்கே.

ஆசுகவி 'கட்டு' நான் அனைவரும் அறிய
பேசுவேன் கடகத்தின் பெருமையை இங்கே.



**ஏஷியன் பெயிண்ட்ஸ்**

Adroit-36 Tam